بسم الله الرحمن الرحيم

# الفقه الميسر

في ضوء الكتاب والسنة

تأليف نبذة من العلماء حفظهم الله

4ம் பாகம்

குர்ஆன், சுன்னா ஒளியில்

# இலகுவான மார்க்க சட்டம்

## كتاب الصيام

## நோன்பு

அரபியில் :
அறிஞர்களின் குழு

தமிழில் :
குர்ஆன், சுன்னா பணியாளர்
உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்

DARUL HUDA
دار الهدى
إن هدى الله هو الهدى
நிச்சயமாக (இஸ்லாமாகிய) அல்லாஹ்வின் நேர்வழியே உண்மையான நேர்வழி

# KITAB SIYAM - AL FIQHUL MUYASSAR

ABOUT THIS BOOK

| | |
|---|---|
| Author | : GROUP OF SCHOLARS |
| Translator | : Omar Sheriff Ibnu Abdus Salam |
| Proof Readers | : Alim O.M. Kaja Mohaideen Rabbani<br>Alim A. Mohamed Mydeen Baqavi<br>Alim A. Abdul Qadir Rabbani |
| Designers | : Z. Abdul Bari Sadaqi, Mohamed Anas |
| Language | : Tamil |
| Edition | : 1st (August 2019) |
| Copies | : 3000 |
| Total Pages | : 80 |
| **Price** | **: Rs. 80/-** |
| Printed by | : Patel Graphics, Chennai - 06. |
| Reference No. | : DH-TML 2058 |

Published by:

DARUL HUDA
QUALITY ISLAMIC BOOK PUBLISHERS
# 211 (102), 1st Floor, Linghi Street, Mannady, Chennai 600001.
Phone : +91 44 25247866, | darulhuda.chennai@gmail.com
Mobile : +91 98401 74121 | www.darulhuda.net

# பதிப்புரை

**الحمد لله والصلاة والسلام على رسول الله وعلى آله وصحبه أجمعين**

அல்லாஹ்வின் அருளால், அல்ஃபிக்ஹுல் முயஸ்ஸர் என்ற பெயரில் திறமை வாய்ந்த மார்க்க அறிஞர்கள் குர்ஆன் மற்றும் ஸுன்னாவின் அடிப்படையில் தொகுத்த கிரந்தத்திலிருந்து **1. தூய்மை 2. தொழுகை 3. ஸகாத்** ஆகிய அத்தியாயங்களை வெளியிட்டதைத் தொடர்ந்து **நோன்பு** உடைய சட்டங்கள் நிறைந்த இந்த நான்காவது அத்தியாயத்தை வெளியிடுகின்றோம். அல்ஹம்து லில்லாஹ்!

மார்க்க கல்வி கற்ற ஆலிம்களுக்கும் கல்வி கற்கின்ற மாணவர்களுக்கும் பொதுமக்களுக்கும் இந்நூல் இன் ஷா அல்லாஹ் பயனுள்ளதாக இருக்கும். இந்த அத்தியாயங்களைத் தொடர்ந்து முஆமலாத் (–பொருளாதாரம்) தொடர்பான அத்தியாயங்களும் விரைவில் வெளிவர இருக்கின்றன இன் ஷா அல்லாஹ்...

இந்நூலில் ஏதேனும் குறைகளை தாங்கள் கண்டால் எங்களுக்கு தெரியப்படுத்துங்கள். இன்ஷா அல்லாஹ்... அடுத்த பதிப்பில் திருத்தி வெளியிடுகிறோம்.

இந்நூல் வெளிவருவதற்கு உதவியாக இருந்த தாருல் ஹுதாவின் பணியாளர்கள் எல்லோருக்கும் இம்மை மறுமை நற்பாக்கியங்களை அல்லாஹ் தந்தருள்வானாக! ஆமீன்.

இந்நூலை அல்லாஹ் அங்கீகரித்து மக்களெல்லாம் பயன்பெறும்படி செய்வானாக! தொடர்ந்து பயன்தருகின்ற நல்ல நூல்களை வெளியிடுவதற்கு அல்லாஹ் உதவி செய்வானாக! ஆமீன்.

மார்க்க பணியாளன்
*உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்*
தாருல் ஹுதா, சென்னை 600001.

# தாருல் ஹுதா
## ஓர் அறிமுகம்

எல்லாப் புகழும் அகிலங்களின் இறைவன் அல்லாஹ் ஒருவனுக்கே! இறையருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது ﷺ அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அவர்களைப் பின்பற்றும் அனைவருக்கும் உண்டாகட்டும்!

இஸ்லாமியச் சகோதர சகோதரிகளே!

அஸ்ஸலாமு அலைக்கும்

வரஹ்மத்துல்லாஹி வபரகாத்துஹு

தாருல் ஹுதாவை அறிமுகம் செய்வதன் வாயிலாக உங்களைச் சந்திப்பதில் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம். இதில் தாருல் ஹுதாவின் நோக்கத்தையும் அதன் பணிகளையும் விவரிப்பதுடன் அதன் இன்றைய தேவையையும் தங்கள் முன் வைக்கிறோம்.

அல்லாஹு தஆலா கூறுகிறான்:

நம்பிக்கை கொண்ட ஆண்களும், நம்பிக்கை கொண்ட பெண்களும் (தங்களுக்குள்) ஒருவருக்கொருவர் உற்ற துணைவர்களாவர். அவர்கள், (ஒருவர் மற்றவரை) நன்மை செய்யும்படித் தூண்டியும், பாவம் செய்யாது தடுத்தும், தொழுகையைக் கடைப்பிடித்து, ஸகாத்து கொடுத்தும் வருவார்கள். அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கட்டுப்பட்டு நடப்பார்கள். இத்தகையவர்களுக்கு அதிசீக்கிரத்தில் அல்லாஹ் அருள் புரிவான். நிச்சயமாக, அல்லாஹ் மிகைத்தவனாகவும், ஞானமுடையவனாகவும் இருக்கின்றான்." (அத்தவ்பா 9:71)

(நம்பிக்கையாளர்களே!) உங்களில் ஒரு கூட்டத்தார் (மனிதர்களை)

சிறந்ததின் பக்கம் அழைத்து நன்மையைச் செய்யும்படி ஏவி பாவமான காரியங்களிலிருந்து அவர்களை விலக்கிக் கொண்டும் இருக்கட்டும். இத்தகையவர்கள்தாம் வெற்றி பெற்றவர்கள். (ஆலுஇம்ரான் 3:104)

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களில் யாராவது ஒரு தவறைக் கண்டால் அதை தமது கரத்தால் மாற்றட்டும். அதுவும் இயலாவிட்டால் தமது நாவால் மாற்றட்டும் அதுவும் இயலாவிட்டால் உள்ளத்தால் (வெறுத்து விலகி விடட்டும்). இது ஈமானின் (நம்பிக்கையின்) குறைந்தபட்ச அளவாகும். (ஸஹீஹ் முஸ்லிம்)

மேலும் கூறினார்கள்: நம்பிக்கையாளர்கள் தங்களிடையே நேசம் கொள்வதற்கும், கருணை காட்டுவதற்கும், அன்பு செலுத்துவதற்கும் உதாரணம் ஓர் உடலைப் போல. உடலில் ஏதேனும் ஓர் உறுப்பு பாதிக்கப்பட்டால் அனைத்து உறுப்புகளும் காய்ச்சல் மற்றும் தூக்கமின்மையால் முறையிடுகின்றன. (ஸஹீஹுல் புகாரி)

இன்று நமது சமுதாயத்தில் சிறியவர் முதல் பெரியோர் வரை பெரும்பாலோர் சரியான மார்க்க ஞானத்திற்கும் முறையான வழிகாட்டலுக்கும் அதிகம் தேவை உள்ளவர்களாக இருப்பதை பார்க்கிறோம். ஆகவே மேற்கூறப்பட்ட இறை வசனங்கள் மற்றும் நபி மொழிக்கு இணங்க சமுதாய சீர்திருத்தப் பணியில் ஈடுபடுவது மார்க்கக் கடமை என்பதை உணர்ந்து அல்குர்ஆன் மற்றும் நபிவழியின் அடிப்படையில் அந்த உயர்ந்த பணியை நிறைவேற்றி இறை திருப்தியை அடைய வேண்டும் என்ற தூய எண்ணத்தில் தொடங்கப்பட்டதுதான் ‘தாருல் ஹுதா’.

## தாருல் ஹுதாவின் பணிகளும் தொண்டுகளும்

### அழைத்தல்:

இதுவே இஸ்லாமின் அடிப்படையாகும். உலகில் இப்பணி இறைத் தூதர்கள் வாயிலாக நிலை நிறுத்தப்பட்டது. இறுதி இறைத்தூதர் முஹம்மது ﷺ அவர்களுக்கு பின் அவர்களுடைய சமுதாயத்தினர் அனைவரின் மீதும் இப்பணி கடமையாக்கப்பட்டது. மேன்மைமிகு குர்ஆனும்

சிறப்புமிகு நபிமொழியும் இதன் அவசியத்தை வலியுறுத்துகின்றன. எனவே இயன்ற அளவு அனைத்து வழிகளிலும் மனித சமுதாயத்திற்கு இஸ்லாமை அறிமுகப்படுத்துவதும் அதன் உயர்வுகளை விளக்கிச் சொல்லி அதன் பக்கம் அழைப்பதும் தாருல் ஹுதாவின் முதல் பணியாகும்.

**கற்பித்தல்:**

இஸ்லாமை அறிய விரும்பும் சிறுவர்கள் வாலிபர்கள் முதியவர்கள் ஆண்கள் பெண்கள் என அனைவருக்கும் மேன்மைமிகு குர்ஆன் சிறப்புமிகு நபிமொழிகளை அவரவர் தகுதிக்கேற்ப கற்றுத்தருவது தாருல் ஹுதாவின் இரண்டாவது பணியாகும்.

**நூல் வெளியிடுதல்:**

மேன்மைமிகு குர்ஆன் சிறப்புமிகு நபிமொழி இரண்டையும் அடிப்படையாகக் கொண்டு சமுதாயப் பேரறிஞர்களால் அரபி மொழியில் எழுதப்பட்ட நூல்களை தமிழிலும் ஏனைய உலக மொழிகளிலும் மொழியாக்கம் செய்து அந்நூற்களைச் சலுகை விலையில் மக்களுக்கு வழங்குவது தாருல் ஹுதாவின் மூன்றாவது பணியாகும்.

**உதவுதல்:**

அல்லாஹு தஆலாவே அனைவரின் துன்பங்கள் அனைத்தையும் நிவர்த்தி செய்பவன். மிகப்பெரிய வள்ளலாகிய அல்லாஹ் தன் சார்பாக உலகில் ஏழை எளியோரின் துயர் துடைக்கும் வள்ளல் பெருமக்களுக்கு பெரும் வெகுமதிகளை ஈருலகிலும் வழங்குவதாக வாக்களித்துள்ளான். பிறர் துன்பங்களில் பங்கு பெறுவதும் பிறர் தேவைகளை நிறைவேற்ற இயன்றவரை உதவுவதும் முஸ்லிம்களுடைய அடிப்படை பண்புகளாகும்.

இந்த உன்னத பணிக்காக “பைத்துல்மால்” (பொது நிதி) ஏற்பாடு செய்து இரக்க சிந்தையும் மார்க்கப் பற்றும் கொண்ட வள்ளல் பெருமக்களிடமிருந்து கடமையான உபரியான தர்மங்களை பெற்று அவற்றை தேவையுடையவர்களுக்கு வழங்குதல் தாருல் ஹுதாவின் நான்காவது பணியாகும்.

இந்தப் பணிகள் மட்டுமின்றி இஸ்லாம் முழுமை யாக ஒவ்வொருவரின் வாழ்விலும் வரவேண்டும் என்பதற்காக மனித சமுதாயம் நல்லுறவும் அன்பும் கருணையும் சமூகப் புரிந்துணர்வு ஏற்பட வேண்டும் என்பதற்காகவும் இயன்றவரை அல்லாஹ்வுக்காக தொண்டாற்ற வேண்டும் என்பது தாருல் ஹுதாவின் குறிக்கோளாகும்.

இப்பணிகள் அனைத்தும் தொய்வின்றி தொடர்ந்து சிறப்பாக, திறம்பட நடைபெறவும், அவற்றை அல்லாஹ் அங்கீகரிக்கவும் தாங்கள் துஆ செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்வதுடன், தங்களால் இயன்றவரை இப்பணிகளில் பங்குபெறுமாறும் அழைக்கிறோம்.

//////////////

## உள்ளே...

قَالَ اللّٰهُ تَعَالَىٰ

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا كُتِبَ عَلَيْكُمُ الصِّيَامُ
كَمَا كُتِبَ عَلَى الَّذِينَ مِنْ قَبْلِكُمْ لَعَلَّكُمْ تَتَّقُونَ

سورة البقرة الآية ١٨٣

*நம்பிக்கையாளர்களே! நீங்கள் தக்வா -இறையச்சம் உள்ளவர்களாக ஆகவேண்டும் என்பதற்காக உங்கள் மீது நோன்பு கடமையாக்கப்பட்டுள்ளது, உங்களுக்கு முன்னுள்ளவர்கள் மீது நோன்பு கடமையாக்கப்பட்டது. போன்று. (அல்குர்ஆன் 2:183)*

# كتاب الصيام

# நோன்பு

இந்த அத்தியாயத்தில் ஐந்து பாடங்கள் உள்ளன.

*முதல் பாடம்*

### முன்னுரை

இந்த முன்னுரையில் பல சட்டவிளக்கங்களைப் பார்ப்போம்.

முதல் சட்டவிளக்கம்

## நோன்பு உடைய பொருள் மற்றும் நோன்பின் ருக்னுகளுடைய விளக்கம்

1). ஒன்றை விட்டும் தவிர்ந்திருப்பதற்கும் அல்லது தன்னை விட்டும் ஒன்றை தடுத்துக்கொள்வதற்கும் அரபி மொழியில் ஸியாம் -நோன்பு என்ற பதம் பயன்படுத்தப்படுகின்றது.

அதிகாலை உதயமாகியதிலிருந்து சூரியன் மறைகின்றவரை, நோன்பு இருக்கின்றேன் என்ற நிய்யத் - எண்ணத்துடன் உண்பது, குடிப்பது, உடலுறவு கொள்வது ஆகியவற்றை விட்டும் தவிர்ந்திருப்பதற்கு ஸியாம் - நோன்பு என்று மார்க்கத்தில் கூறப்படுகின்றது.

2). நோன்பின் ருக்னுகள் -அம்சங்கள்.

ஸியாம் - நோன்புக்கு நாம் கூறிய விளக்கத்திலிருந்து நோன்பிற்கு அடிப்படையான இரண்டு ருக்னுகள் -அம்சங்கள் உள்ளன என்பதை தெளிவாக அறியமுடியும்.

1). அதிகாலை உதயத்திலிருந்து சூரியன் மறைகின்ற வரை, நோன்பை முறிக்கின்ற காரியங்களை விட்டும் விலகி இருப்பது.

அல்லாஹ் கூறுகின்றான்:

فَالْآنَ بَاشِرُوهُنَّ وَابْتَغُوا مَا كَتَبَ اللَّهُ لَكُمْ وَكُلُوا وَاشْرَبُوا حَتَّى يَتَبَيَّنَ لَكُمُ الْخَيْطُ الْأَبْيَضُ مِنَ الْخَيْطِ الْأَسْوَدِ مِنَ الْفَجْرِ ثُمَّ أَتِمُّوا الصِّيَامَ إِلَى اللَّيْلِ

இப்போது, (-இரவில்) அவர்களுடன் (-உங்கள் மனைவிகளுடன்) நீங்கள் உறவு வைக்கலாம். அல்லாஹ் உங்களுக்கு விதியில் எழுதிய சந்ததிகளை நீங்கள் அதன் மூலம் தேடுங்கள். இன்னும் உண்ணுங்கள், பருகுங்கள்! அதிகாலையின் வெளிச்சத்தில் கருப்பு நூல், வெள்ளை நூல் தனித்தனியாக தெளிவாக தெரிகின்றவரை. (-அதிகாலை உதித்துவிட்ட) பிறகு, நோன்பை நீங்கள் இரவு வரை நிறைவு செய்யுங்கள்!

(அல்குர்ஆன் 2:187)

இந்த வசனத்தில் வெள்ளை நூல் என்பது பகலின் வெண்மையையும் கருப்பு நூல் என்பது இரவின் கருமையையும் குறிக்கின்றது.

**2). நிய்யத் - எண்ணம்.** அதாவது, நோன்பை முறிக்கின்ற காரியங்களை விட்டும் அல்லாஹ்விற்காக (-அல்லாஹ்வை வணங்குவதற்காக) நான் என்னை தடுத்துக்கொள்கின்றேன் என்ற எண்ணம் மனதில் இருக்க வேண்டும். நிய்யத் - எண்ணம்தான் நமது செயல்களை முடிவு செய்கின்றது. அதாவது நமது செயல் ‘இபாதத்’ ஆக- வழிபாடாக அமைய வேண்டும் என்றால் அந்த செயலை அல்லாஹ்விற்காக செய்கின்றேன் என்ற எண்ணம் இருக்க வேண்டும். அப்படி இல்லை என்றால் அது நன்மை அற்றதாக ஆகிவிடும். ஒரு செயல் இறைவழிபாடாக ஆக வேண்டுமென்றால் கண்டிப்பாக அல்லாஹ்வை இதன் மூலம் நான் வணங்குகின்றேன் என்ற எண்ணம் - நிய்யத் இருக்க வேண்டும்.

ஆகவே, நோன்பாளி தான் வைக்கின்ற நோன்பின் மூலமாக ரமழானுடைய நோன்பை அல்லது நோன்பின் வகைகளில் வேறு ஒன்றை நிய்யத் செய்யவேண்டும்.

عَنْ عُمَرَ بْنَ الْخَطَّابِ ﵁ عَلَى الْمِنْبَرِ قَالَ سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ إِنَّمَا الْأَعْمَالُ بِالنِّيَّاتِ وَإِنَّمَا لِكُلِّ امْرِئٍ مَا نَوَى رواه البخاري برقم ١

அமல்கள் - செயல்கள் எல்லாம் எண்ணங்களைக் கொண்டுதான் (முடிவு செய்யப்படுகின்றன). ஒவ்வொருவருக்கும் அவர் எதை எண்ணினாரோ அதுதான் கிடைக்கும்.[1]

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## ரமழான் மாத நோன்பின் சட்டம் மற்றும் அதன் ஆதாரம்

ரமழான் மாதத்தில் நோன்பு வைப்பதை கட்டாயக் கடமையாகவும் இஸ்லாமின் ஐந்து ருக்னுகளில் ஒன்றாகவும் அல்லாஹ் ஆக்கி இருக்கின்றான்.

அல்லாஹ் கூறுகின்றான்:

**يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا كُتِبَ عَلَيْكُمُ الصِّيَامُ كَمَا كُتِبَ عَلَى الَّذِينَ مِنْ قَبْلِكُمْ لَعَلَّكُمْ تَتَّقُونَ**

நம்பிக்கையாளர்களே! நீங்கள் தக்வா -இறையச்சம் உள்ளவர்களாக ஆகவேண்டும் என்பதற்காக உங்கள் மீது நோன்பு கடமையாக்கப்பட்டுள்ளது, உங்களுக்கு முன்னுள்ளவர்கள் மீது நோன்பு கடமையாக்கப்பட்டது போன்று. (அல்குர்ஆன் 2:183)

மேலும் அல்லாஹ் கூறுகின்றான்:

**شَهْرُ رَمَضَانَ الَّذِي أُنْزِلَ فِيهِ الْقُرْآنُ هُدًى لِلنَّاسِ وَبَيِّنَاتٍ مِنَ الْهُدَى وَالْفُرْقَانِ فَمَنْ شَهِدَ مِنْكُمُ الشَّهْرَ فَلْيَصُمْهُ (١٨٥)**

ரமழான் மாதம் எத்தகையதென்றால், மக்களுக்கு நேர்வழி காட்டியாகவும் நேர்வழிகளின் அத்தாட்சிகளாகவும் சத்தியத்தை பிரித்தறிவிக்கக் கூடியதாகவும் குர்ஆன் இறக்கப்பட்டது. ஆகவே, உங்களில் யார்

1. அறிவிப்பாளர்: உமர் இப்னுல் கத்தாப் ﷺ, நூல்: புகாரி, எண்: 1

அம்மாதத்தில் உள்ளூரில் இருக்கின்றாரோ அவர் கண்டிப்பாக அதில் நோன்பு வைக்கட்டும். (அல்குர்ஆன் 2:185)

عَنْ ابْنِ عُمَرَ ﵄ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ بُنِيَ الْإِسْلَامُ عَلَى خَمْسٍ شَهَادَةِ أَنْ لَا إِلَهَ إِلَّا اللهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللهِ وَإِقَامِ الصَّلَاةِ وَإِيتَاءِ الزَّكَاةِ وَالْحَجِّ وَصَوْمِ رَمَضَانَ رواه البخاري برقم ٧

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: இஸ்லாம் ஐந்தின் மீது அமைக்கப்பட்டுள்ளது. 1). நிச்சயமாக வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறவே இல்லை. மேலும் நிச்சயமாக முஹம்மது அவர்கள் அல்லாஹ்வுடைய தூதர் ஆவார்கள் என்று சாட்சி கூறுவது. 2). தொழுகையை நிலைநிறுத்துவது. 3). ஸகாத் கொடுப்பது. 4). ஹஜ் செய்வது. 5). ரமழான் மாதத்தில் நோன்பு நோற்பது.[2]

طَلْحَةَ بْنَ عُبَيْدِ اللهِ ﵁ يَقُولُ جَاءَ رَجُلٌ إِلَى رَسُولِ اللهِ ﷺ مِنْ أَهْلِ نَجْدٍ ثَائِرَ الرَّأْسِ يُسْمَعُ دَوِيُّ صَوْتِهِ وَلَا يُفْقَهُ مَا يَقُولُ حَتَّى دَنَا فَإِذَا هُوَ يَسْأَلُ عَنْ الْإِسْلَامِ فَقَالَ رَسُولُ اللهِ ﷺ خَمْسُ صَلَوَاتٍ فِي الْيَوْمِ وَاللَّيْلَةِ فَقَالَ هَلْ عَلَيَّ غَيْرُهَا قَالَ لَا إِلَّا أَنْ تَطَوَّعَ قَالَ رَسُولُ اللهِ ﷺ وَصِيَامُ رَمَضَانَ قَالَ هَلْ عَلَيَّ غَيْرُهُ قَالَ لَا إِلَّا أَنْ تَطَوَّعَ قَالَ وَذَكَرَ لَهُ رَسُولُ اللهِ ﷺ الزَّكَاةَ قَالَ هَلْ عَلَيَّ غَيْرُهَا قَالَ لَا إِلَّا أَنْ تَطَوَّعَ قَالَ فَأَدْبَرَ الرَّجُلُ وَهُوَ يَقُولُ وَاللهِ لَا أَزِيدُ عَلَى هٰذَا وَلَا أَنْقُصُ قَالَ رَسُولُ اللهِ ﷺ أَفْلَحَ إِنْ صَدَقَ رواه البخاري برقم ٤٤

'நஜ்து' வாசிகளைச் சேர்ந்த ஒருவர் தலை முடி கலைந்தவராக ரசூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் வந்தார். அவரின் முணு முணுப்புகள் (எங்களுக்கு) கேட்டன. ஆனால், அவர் என்ன கூறுகிறார் என்பதை

2. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﵄, நூல்: புகாரி, எண்: 7

புரியமுடிவில்லை. இறுதியாக, அவர் நெருங்கி வந்தார். அப்போது அவர் இஸ்லாமைப் பற்றி கேள்வி கேட்கிறார் (என்று நாங்கள் அறிந்தோம்).

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: "பகலிலும் இரவிலும் ஐந்து நேரத் தொழுகைகள் (கட்டாயக் கடமையாகும்)." இவற்றைத் தவிர வேறு ஏதும் என் மீது (கடமையாக) இருக்கின்றனவா? என்று அவர் கேட்க, "இல்லை, நீர் உபரியாக செய்தாலே தவிர" என்று கூறி, இன்னும் ரமழானில் நோன்பிருக்க வேண்டும் என்றும் நபி ﷺ அவர்கள் கூறினார்கள். இதைத் தவிர வேறு ஏதும் என் மீது (கடமையாக) இருக்கின்றதா என்று அவர் கேட்க, "இல்லை, நீர் உபரியாக செய்தாலே தவிர" என்று நபி ﷺ கூறினார்கள்.

மேலும் அவருக்கு ஸகாத்தைப் பற்றி ரசூலுல்லாஹ் ﷺ விவரித்தார்கள். இதைத் தவிர வேறு ஏதும் என் மீது (கடமையாக) இருக்கின்றதா என்று அவர் கூறினார். இல்லை, நீர் உபரியாக செய்தாலே தவிர என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.

பிறகு, அந்த மனிதர், அல்லாஹ்வின் மீது சத்தியமாக இதற்கு மேல் நான் அதிகப்படுத்தவும் மாட்டேன், குறைக்கவும் மாட்டேன் என்று கூறியவராக திரும்பிச் சென்றார். இவர் (கூறியவாறே) உண்மையாக நடந்து கொண்டால் இவர் வெற்றி பெறுவார் என்று ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்.[3]

ரமழான் மாதத்தில் நோன்பு நோற்பது கட்டாயக் கடமை என்பதில் இந்த சமுதாயத்தில் யாருக்கும் மாற்று கருத்து இல்லை. இதுதான் அனைவரின் ஏகோபித்த கருத்தாகும். இஸ்லாமிய மார்க்கத்தின் முக்கியமான தூண்கள் என்று வெளிப்படையாக அறியப்பட்டவற்றில் இதுவும் ஒன்றாகும். இதை ஏற்க மறுப்பவர் காஃபிர் - இறைநிராகரிப்பாளர், முர்தத் - மதம் மாறியவர் என்று கருதப்படுவார்.

ஆகவே, குர்ஆன், சுன்னா மற்றும் இஜ்மா ஆகியவற்றின் மூலம் ரமழான் மாதத்தின் நோன்பு **فرض** - ஃபர்ழ் கட்டாயக் கடமை என்பது உறுதியாகிறது. இதை மறுப்பவர் **كافر** - காஃபிர் - இறைநிராகரிப்பாளர் என்பதில் முஸ்லிம்கள் அனைவரும் ஒரே கருத்தில் இருக்கின்றனர்.

3. அறிவிப்பாளர்: தல்ஹா இப்னு உபைதில்லாஹ் ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 44.

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## நோன்பின் வகைகள்

நோன்பு இரு வகைகள் ஆகும்.

1). வாஜிப் - கட்டாயமான நோன்பு.

2) நஃபில் - உபரியான நோன்பு

கட்டாயமான நோன்பு மூன்று வகைப்படும்.

1). ரமழான் மாத நோன்பு

2). குற்றப் பரிகார நோன்புகள்

3). நேர்ச்சை நோன்புகள்

ரமழான் மாத நோன்பைப் பற்றியும் உபரியான நஃபில் நோன்பைப் பற்றியும் இந்த அத்தியாயத்தில் நாம் பேசுவோம். மற்ற நோன்புகளைப் பற்றி அவற்றுக்குரிய இடத்தில் விளக்கம் வரும் இன் ஷா அல்லாஹ்.

**நான்காவது சட்டவிளக்கம்**

## ரமழான் மாத நோன்பின் சிறப்புகள் மற்றும் ரமழான் மாத நோன்பு சட்டமாக்கப்பட்டதில் உள்ள தத்துவம்

**சிறப்புகள்:**

நபிமொழி 1

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ صَامَ رَمَضَانَ إِيمَانًا وَاحْتِسَابًا غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ رواه البخاري برقم ٣٧**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: யார் ரமழானில் இறைநம்பிக்கையுடனும் நன்மையின் ஆதரவுடனும் நோன்பிருப்பாரோ அவரின் முந்திய பாவங்கள் அவருக்கு மன்னிக்கப்பட்டுவிடும்.[4]

4. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 37.

நபிமொழி 2

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ أَنَّ رَسُولَ اللهِ ﷺ كَانَ يَقُولُ الصَّلَوَاتُ الْخَمْسُ وَالْجُمْعَةُ إِلَى الْجُمْعَةِ وَرَمَضَانُ إِلَى رَمَضَانَ مُكَفِّرَاتٌ مَا بَيْنَهُنَّ إِذَا اجْتَنَبَ الْكَبَائِرَ

رواه مسلم برقم ٣٤٤

ஐந்து நேரத் தொழுகைகள், ஜுமுஆ தொழுகை (அடுத்த) ஜுமுஆ தொழுகை வரை, ரமழான் (அடுத்த) ரமழான் வரை, தங்களுக்கு மத்தியில் உள்ளவற்றை (-பாவங்களை) போக்கி விடுகின்றன, பெரும் பாவங்களைவிட்டு அவர் விலகிக்கொண்டால் என்று ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்.[5]

நோன்புக்கு பல சிறப்புகள் உள்ளன. அவற்றில் சிலவற்றைத்தான் மேற்கூறப்பட்ட நபிமொழியில் பார்த்தோம்.

நோன்பு கடமையாக்கப்பட்டதில் பல தத்துவங்கள் உள்ளன. அல்லாஹ் பல தத்துவங்களுக்காகவும் நன்மைகளுக்காகவும் நோன்பை மார்க்க சட்டமாக்கினான். அவற்றில் சில:

1). ஆன்மாவை பரிசுத்தப்படுத்துவது, அற்ப குணங்களை விட்டும் கெட்ட பண்புகளை விட்டும் உள்ளத்தை சுத்தப்படுத்துவது. ஏனெனில், நோன்பு மனித உடலில் ஷைத்தான் ஊடுருவி செல்லக்கூடிய எல்லா வழிகளையும் நெருக்கி விடுகின்றது.

2). உலக ஆசைகளையும் அற்ப இச்சைகளையும் விட்டு உள்ளத்தை விடுவித்து, மறுமையிலும் அதன் இன்பத்திலும் ஆசைகொள்ள வைப்பது.

3). நோன்பு ஏழைகளின் மீது கருணையையும் பாசத்தையும் ஏற்படுத்தி, அவர்களின் சிரமங்களை உணரவைக்கின்றது. ஏனெனில், நோன்பாளி பசி இன்னும் தாகத்தின் சிரமத்தை கொஞ்சம் சுவைக்கின்றார்.

இன்னும் இவை அல்லாத பல தத்துவங்களும் ஞானங்களும் நன்மைகளும் நோன்பு கடமையாக்கப்பட்டதில் இருக்கின்றன.

5. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், ஹதீஸ் எண்: 344.

ஐந்தாவது சட்டவிளக்கம்

## ரமழானுடைய நோன்பு கடமையாவதற்குரிய நிபந்தனைகள்

யாரிடம் பின்வரும் நிபந்தனைகள் பூர்த்தியாகிவிடுமோ அவர் மீது ரமழான் நோன்பு வைப்பது கட்டாயக் கடமை ஆகிவிடுகின்றது.

அந்த நிபந்தனைகள்:

### 1). முஸ்லிமாக இருக்க வேண்டும்

ஆகவே, காஃபிர் நோன்பு வைப்பது சரியாகாது. நோன்பு ஒரு இபாதா - இறைவழிபாடாகும். ஒருவர் காஃபிராக இருக்கும்போது அவர் இறைவழிபாட்டுக்கு தகுதி அற்றவராக இருக்கின்றார். அவர் செய்கின்ற இபாதத் - இறைவழிபாடு செல்லாது. ஆகவே, ஒருவர் இஸ்லாமை ஏற்றுக்கொள்ளும்போது அவருக்குத் தவறிய முந்திய நோன்புகளை கழா செய்யும்படி கட்டாயப்படுத்தப்பட மாட்டார்.

### 2). பருவ வயதை அடைந்திருக்க வேண்டும்.

மார்க்க சட்டங்கள் கடமையாகின்ற பருவ வயதை யார் அடையவில்லையோ அவர் மீது நோன்பு கடமையாகாது.

عَنْ عَلِيٍّ ﵁ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ رُفِعَ الْقَلَمُ عَنْ ثَلَاثَةٍ عَنِ الْمَجْنُونِ الْمَغْلُوبِ عَلَى عَقْلِهِ حَتّٰى يُفِيقَ وَعَنِ النَّائِمِ حَتّٰى يَسْتَيْقِظَ وَعَنِ الصَّبِيِّ حَتّٰى يَحْتَلِمَ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ٣٨٢٣

நபி ﷺ கூறினார்கள்: மூன்று நபர்களை விட்டும் சட்டம் உயர்த்தப்பட்டு விட்டது. தனது அறிவை இழந்த பைத்தியக்காரர் அவர் தெளிவடைகின்றவரை, தூங்குபவர் விழிக்கின்றவரை, குழந்தை பருவ வயதை அடைகின்றவரை அவர்களை விட்டும் சட்டம் உயர்த்தப்பட்டுவிட்டது (அகற்றப்பட்டு விட்டது).[6]

6. அறிவிப்பாளர்: அலீ ؓ, நூல்: சுனன் அபூ தாவூத், ஹதீஸ் எண்: 3823.

விவரம் அறிந்த ஒரு சிறுவர் நோன்பு நோற்றால் அவருடைய நோன்பு சரியாக ஆகிவிடும்.

பொறுப்பாளர்கள் தங்கள் பொறுப்பில் வளர்கின்ற சிறுவர்களை நோன்பு நோற்க தூண்ட வேண்டும். இதனால் சிறுபிராயத்திலிருந்தே நோன்பு வைக்கின்ற பழக்கம் ஏற்பட்டுவிடும். நோன்பின் மீது பிரியமும் ஈடுபாடும் உண்டாகிவிடும்.

**3). அறிவு சுவாதீனம் இருக்க வேண்டும்.**

நோன்பு வைப்பது பைத்தியம் இன்னும் புத்திவளர்ச்சி இல்லாதவர் மீது கடமையாகாது.

**عَنْ عَلِيٍّ ﵁ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ رُفِعَ الْقَلَمُ عَنْ ثَلَاثَةٍ عَنِ الْمَجْنُونِ الْمَغْلُوبِ عَلَى عَقْلِهِ حَتّٰى يُفِيقَ وَعَنِ النَّائِمِ حَتّٰى يَسْتَيْقِظَ وَعَنِ الصَّبِيِّ حَتّٰى يَحْتَلِمَ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ٣٨٢٣**

நபி ﷺ கூறினார்கள்: மூன்று நபர்களை விட்டும் சட்டம் உயர்த்தப்பட்டு விட்டது. தனது அறிவை இழந்த பைத்தியக்காரர் அவர் தெளிவடைகின்றவரை, தூங்குபவர் விழிக்கின்றவரை, குழந்தை பருவ வயதை அடைகின்றவரை அவர்களை விட்டும் சட்டம் உயர்த்தப்பட்டுவிட்டது (அகற்றப்பட்டு விட்டது).[7]

**4). உடல் நலத்துடன் இருக்க வேண்டும்.**

நோன்பு நோற்க முடியாத அளவு ஒருவர் நோயுற்று இருந்தால் அவர் மீது நோன்பு கடமையாகாது. ஆனால், அவர் நோன்பு நோற்றால் அந்த நோன்பு சரியாக ஆகிவிடும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

**وَمَنْ كَانَ مَرِيضًا أَوْ عَلَى سَفَرٍ فَعِدَّةٌ مِنْ أَيَّامٍ أُخَرَ**

---

7. அறிவிப்பாளர்: அலீ ﵁, நூல்: சுனன் அபூ தாவூத், ஹதீஸ் எண்: 3823.

யார் நோயாளியாக இருக்கின்றாரோ அல்லது பயணத்தில் இருக்கின்றாரோ அவர் (தனக்கு விட்டுப்போன நோன்புகளை) வேறு நாட்களில் எண்ணி வைத்துக்கொள்ளட்டும். (அல்குர்ஆன் 2:185)

ஆகவே, நோயாளி தான் நலமடைந்தவுடன் தனக்கு விட்டுப் போன நோன்புகளை கழா - நிறைவேற்ற வேண்டும்.

**5). உள்ளூரில் தங்கி இருக்க வேண்டும்.**

ஒருவர் பயணத்தில் இருந்தால் அவர் மீது நோன்பு கடமையாகாது. ஆனால், அவர் நோன்பு நோற்றால் அந்த நோன்பு சரியாகிவிடும். பயணத்தில் அவர் உள்ளூர் வந்து தங்கியவுடன் தனக்கு விடுபட்ட நோன்பை கழா - நிறைவற்ற வேண்டும்.

**6). பெண் தனது மாதவிடாய் மற்றும் பிரசவ உதிரப்போக்கு ஆகியவற்றிலிருந்து நீங்கி சுத்தமாகி இருக்க வேண்டும்.**

மாதவிடாய் உள்ள பெண்கள் மற்றும் பிரசவ உதிரப்போக்குள்ள பெண்கள் மீது நோன்பு நோற்பது கடமையாகாது. மாறாக, நோன்பு நோற்பது அவர்கள் மீது ஹராம் - தடுக்கப்பட்டதாகும்.

**وَعَنْ أَبِي سَعِيدٍ ﷛ قَالَ قَالَ النَّبِيُّ ﷺ أَلَيْسَ إِذَا حَاضَتْ لَمْ تُصَلِّ وَلَمْ تَصُمْ فَذٰلِكَ نُقْصَانُ دِينِهَا رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨١٥**

நபி ﷺ கூறினார்கள்: பெண்ணுக்கு மாதவிடாய் வந்துவிட்டால் அவள் தொழாமல், நோன்பு வைக்காமல் இருப்பதில்லையா? அதுதான் அவளுடைய மார்க்கம் குறைவாக இருப்பதாகும்.[8]

மாதவிடாயில் உள்ளவள் அதிலிருந்து சுத்தமானவுடன் தான் விட்ட நோன்புகளை நோற்க வேண்டும். அவ்வாறே, பிரசவ உதிரப்போக்குள்ளவளும் அதிலிருந்து சுத்தமானவுடன் தனக்கு தவறிய நோன்புகளை நோற்க வேண்டும்.

8. அறிவிப்பாளர்: அபூ சயீது ﷛, நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 1815.

عَنْ مُعَاذَةَ ﵂ قَالَتْ سَأَلْتُ عَائِشَةَ ﵂ فَقُلْتُ مَا بَالُ الْحَائِضِ تَقْضِي الصَّوْمَ وَلَا تَقْضِي الصَّلَاةَ فَقَالَتْ أَحَرُورِيَّةٌ أَنْتِ؟ قُلْتُ لَسْتُ بِحَرُورِيَّةٍ وَلَكِنِّي أَسْأَلُ. قَالَتْ كَانَ يُصِيبُنَا ذَلِكَ فَنُؤْمَرُ بِقَضَاءِ الصَّوْمِ وَلَا نُؤْمَرُ بِقَضَاءِ الصَّلَاةِ

رَوَاهُ مسلم بِرَقْمِ ٣٣٥

முஆதா ﵂ கூறுகிறார்கள்: ஆயிஷா ﵂ அவர்களிடம், நான் கேட்டேன்: ஹைழ் வந்த பெண் (விடுபட்ட) நோன்பை கழா செய்கிறாள். (விடுபட்ட) தொழுகையை அவள் கழா செய்வதில்லையே ஏன்? என்று நான் கூறினேன். அதற்கு, நீ என்ன காரிஜிய்யா பெண்ணா என்று ஆயிஷா ﵂ கூறினார்கள். நான் காரிஜிய்யா பெண் இல்லை. என்றாலும் (அறிந்து கொள்வதற்காக) கேட்டேன். ஆயிஷா ﵂ கூறினார்கள்: இது (ஹைழ்) எங்களுக்கு ஏற்படும். அப்போது நாங்கள் நோன்பை கழா செய்வதற்கு கட்டளையிடப்படுவோம். தொழுகையை கழா செய்வதற்கு கட்டளையிடப்பட மாட்டோம்.[9]

**ஆறாவது சட்டவிளக்கம்**

## ரமழான் மாதம் வருவதையும் முடிவதையும் உறுதி செய்வதின் முறை

ரமழான் மாத பிறையை தான் பார்த்தாலோ அல்லது பார்த்தவர்கள் சாட்சி கூறினாலோ அல்லது அந்த செய்தி தனக்கு கிடைக்கப் பெற்றாலோ ரமழான் வந்துவிட்டது உறுதியாகிவிடும். ஆகவே, நம்பத்தகுந்த முஸ்லிமான ஒருவர் தான் ரமழான் பிறையை பார்த்ததாக சாட்சி கூறினால் ரமழான் மாதம் வந்துவிட்டதாக உறுதி செய்யப்படும்.

فَمَنْ شَهِدَ مِنْكُمُ الشَّهْرَ فَلْيَصُمْهُ

உங்களில் யார் அந்த மாதத்தை அடைவாரோ அவர் அதில் நோன்பு வைக்கட்டும். (அல்குர்ஆன் 2:185)

9. அறிவிப்பாளர்: முஆதா ﵂, நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 335

عَنْ عَبْدِ اللهِ بْنِ عُمَرَ ﵄ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ الشَّهْرُ تِسْعٌ وَعِشْرُونَ لَيْلَةً فَلَا تَصُومُوا حَتّٰى تَرَوْهُ فَإِنْ غُمَّ عَلَيْكُمْ فَأَكْمِلُوا الْعِدَّةَ ثَلَاثِينَ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٧٧٤

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: மாதம் இருபத்தி ஒன்பது நாட்களாகும். ஆகவே, அதை (-பிறையை) பார்க்கின்ற வரை நோன்பு வைக்காதீர்கள். உங்கள் மீது (பிறை) மறைக்கப்பட்டு விட்டால் (மாதத்தின்) எண்ணிக்கையை முப்பதாக நிறைவு செய்யுங்கள்![10]

وَعَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قال قَالَ النَّبِيُّ ﷺ صُومُوا لِرُؤْيَتِهِ وَأَفْطِرُوا لِرُؤْيَتِهِ فَإِنْ غُبِّيَ عَلَيْكُمْ فَأَكْمِلُوا عِدَّةَ شَعْبَانَ ثَلَاثِينَ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٧٧٦

நபி ﷺ கூறினார்கள்: அதை (-பிறையை)ப் பார்த்து நோன்பு வையுங்கள். அதைப் பார்த்து நோன்பை விடுங்கள். உங்கள் மீது (பிறை) மறைக்கப் பட்டால் ஷஃபானின் எண்ணிக்கையை முப்பதாக நிறைவு செய்யுங்கள்![11]

وَعَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِذَا رَأَيْتُمْ الْهِلَالَ فَصُومُوا وَإِذَا رَأَيْتُمُوهُ فَأَفْطِرُوا فَإِنْ غُمَّ عَلَيْكُمْ فَصُومُوا ثَلَاثِينَ يَوْمًا رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٨٠٨

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நீங்கள் பிறையைப் பார்த்தால் நோன்பு வையுங்கள்! அதை நீங்கள் பார்த்தால் நோன்பை விடுங்கள்! உங்கள் மீது (பிறை) மறைக்கப்பட்டால் முப்பது நாட்கள் நோன்பு வையுங்கள்![12]

وَعَنْ عَائِشَةَ ﵂ تَقُولُ كَانَ رَسُولُ اللهِ ﷺ يَتَحَفَّظُ مِنْ شَعْبَانَ مَا لَا يَتَحَفَّظُ

10. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் ﵄ நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 1774.
11. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 1776.
12. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 1808.

مِنْ غَيْرِهِ ثُمَّ يَصُومُ لِرُؤْيَةِ رَمَضَانَ فَإِنْ غُمَّ عَلَيْهِ عَدَّ ثَلَاثِينَ يَوْمًا ثُمَّ صَامَ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ١٩٨٠

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் ஷஃபான் மாதத்தில் அது அல்லாத மற்ற மாதங்களில் இல்லாத அளவிற்கு (பிறையை பார்க்கின்ற விஷயத்தில்) மிக கவனமாக இருப்பார்கள். பிறகு, ரமழானை (-அதன் பிறையை)ப் பார்த்து நோன்பு வைப்பார்கள். (பிறை) அவர்களுக்கு மறைக்கப்பட்டு விட்டால் (ஷஃபானை) முப்பது நாட்களாக எண்ணி விடுவார்கள். பிறகு நோன்பு வைப்பார்கள்.[13]

وَعَنْ ابْنِ عُمَرَ رضي الله عنهما قَالَ تَرَاءَى النَّاسُ الْهِلَالَ فَأَخْبَرْتُ رَسُولَ اللهِ ﷺ أَنِّي رَأَيْتُهُ فَصَامَهُ وَأَمَرَ النَّاسَ بِصِيَامِهِ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ١٩٩٥

இப்னு உமர் رضي الله عنهما கூறுகிறார்கள்: மக்கள் பிறையைப் பார்க்க முயற்சித்தார்கள். நிச்சயமாக நான் அதைப் பார்த்தேன் என்று ரசூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் அறிவித்தேன். ஆகவே, அவர்களும் அன்று நோன்பு நோற்றார்கள். அன்று நோன்பு வைக்கும்படி மக்களுக்கும் அவர்கள் கட்டளையிட்டார்கள்.[14]

பிறை கண்ணுக்கு தெரியவில்லை என்றால் அல்லது நம்பத்தகுந்த முஸ்லிம் யாரும் பிறையை பார்த்து சாட்சி கூறவில்லை என்றால் ஷஃபான் மாத பிறையை முப்பதாக பூர்த்தி செய்துவிட வேண்டும். இந்த இரண்டு வழிகள் அல்லாத வேறு ஒரு வழியைக்கொண்டு ரமழான் மாதத்தின் வருகையை முடிவு செய்யக் கூடாது. ஒன்று பிறையைப் பார்க்க வேண்டும். அல்லது ரமழானுக்கு முந்திய ஷஃபான் மாதத்தை முப்பதாக பூர்த்தி செய்ய வேண்டும்.

وَعَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه قال قَالَ النَّبِيُّ ﷺ صُومُوا لِرُؤْيَتِهِ وَأَفْطِرُوا لِرُؤْيَتِهِ فَإِنْ غُبِّيَ عَلَيْكُمْ فَأَكْمِلُوا عِدَّةَ شَعْبَانَ ثَلَاثِينَ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٧٧٦

13. அறிவிப்பாளர்: ஆயிஷா رضي الله عنها, நூல்: சுனன் அபூ தாவூத், எண்: 1980.
14. அறிவிப்பாளர்: இப்னு உமர் رضي الله عنهما, நூல்: சுனன் அபூ தாவூத், எண்: 1995.

நபி ﷺ கூறினார்கள்: அதை (-பிறையை)ப் பார்த்து நோன்பு வையுங்கள். அதைப் பார்த்து நோன்பை விடுங்கள். உங்கள் மீது (பிறை) மறைக்கப் பட்டால் ஷஃபானின் எண்ணிக்கையை முப்பதாக நிறைவு செய்யுங்கள்![15]

وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللهُ عَنْهَا تَقُولُ كَانَ رَسُولُ اللهِ ﷺ يَتَحَفَّظُ مِنْ شَعْبَانَ مَا لَا يَتَحَفَّظُ مِنْ غَيْرِهِ ثُمَّ يَصُومُ لِرُؤْيَةِ رَمَضَانَ فَإِنْ غُمَّ عَلَيْهِ عَدَّ ثَلَاثِينَ يَوْمًا ثُمَّ صَامَ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ١٩٨٠

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் ஷஃபான் மாதத்தில் அது அல்லாத மற்ற மாதங்களில் இல்லாத அளவிற்கு (பிறையை பார்க்கின்ற விஷயத்தில்) மிக கவனமாக இருப்பார்கள். பிறகு, ரமழானை (-அதன் பிறையை)ப் பார்த்து நோன்பு வைப்பார்கள். (பிறை) அவர்களுக்கு மறைக்கப்பட்டு விட்டால் (ஷஃபானை) முப்பது நாட்களாக எண்ணி விடுவார்கள். பிறகு நோன்பு வைப்பார்கள்.[16]

ரமழான் மாதத்தை ஆரம்பிப்பதற்கு பிறையை பார்த்ததாக நம்பத்தகுந்த ஒருவர் சாட்சி கூறினால் போதும். ஆனால், ரமழான் மாதத்தை முடிப்பதற்கு முஸ்லிமான, நம்பத்தகுந்த இருவர் ஷவ்வால் மாதத்தின் பிறையை தாங்கள் பார்த்ததாக சாட்சி கூறவேண்டும். அப்படி இல்லையென்றால் ரமழானை முப்பது நாட்களாக பூர்த்தி செய்துவிட வேண்டும்.

**ஏழாவது சட்டவிளக்கம்**

## நோன்பில் நிய்யத் வைக்க வேண்டிய நேரம் மற்றும் அதன் சட்டம்

நோன்பாளி தனது நோன்பை நிய்யத் - நோன்பு நோற்கிறேன் என்ற எண்ணத்தை மனதில் உறுதி செய்து ஆரம்பிக்க வேண்டும். நோன்பின் ருக்னுகளில் நிய்யத்தும் ஒன்றாகும்.

15. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 1776.
16. அறிவிப்பாளர்: ஆயிஷா ؓ, நூல்: சுனன் அபூ தாவூத், எண்: 1980.

**عَنْ عُمَرَ بْنَ الْخَطَّابِ ﷺ عَلَى الْمِنْبَرِ قَالَ سَمِعْتُ رَسُولَ اللهِ ﷺ يَقُولُ إِنَّمَا الْأَعْمَالُ بِالنِّيَّاتِ وَإِنَّمَا لِكُلِّ امْرِئٍ مَا نَوَى رواه البخاري برقم ١**

அமல்கள் - செயல்கள் எல்லாம் எண்ணங்களைக் கொண்டுதான் (முடிவு செய்யப்படுகின்றன). ஒவ்வொருவருக்கும் அவர் எதை எண்ணினாரோ அதுதான் கிடைக்கும்.[17]

ரமழான் நோன்பு, பரிகார நோன்பு, தவறிவிட்ட கழா நோன்பு, நேர்ச்சை நோன்பு ஆகிய கடமையான நோன்புகளின் நிய்யத்தை இரவில் வைக்க வேண்டும். குறைந்த பட்சம் அதிகாலை விடிவதற்கு சில நொடிகளுக்கு முன்பாவது தான் நோற்கப்போகின்ற நோன்பை நிய்யத் செய்ய வேண்டும்.

**عَنْ حَفْصَةَ ﷺ زَوْجِ النَّبِيِّ ﷺ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ مَنْ لَمْ يُجْمِعْ الصِّيَامَ قَبْلَ الْفَجْرِ فَلَا صِيَامَ لَهُ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ٢٠٩٨**

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் ஒருவர் ஃபஜ்ர் -அதிகாலைக்கு முன்பே நோன்பை முடிவு செய்யவில்லையோ அவருக்கு நோன்பே இல்லை.[18]

**وَعَنْ حَفْصَةَ ﷺ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ مَنْ لَمْ يُبَيِّتْ الصِّيَامَ قَبْلَ الْفَجْرِ فَلَا صِيَامَ لَهُ رَوَاهُ النَّسَائِيُّ بِرَقْمِ ٢٢٩١**

நபி ﷺ கூறினார்கள்: யார் நோன்பு நோற்பதை இரவிலேயே முடிவு செய்யவில்லையோ அவருக்கு நோன்பே இல்லை.[19]

**وَعَنْ حَفْصَةَ ﷺ قَالَتْ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَا صِيَامَ لِمَنْ لَمْ يَفْرِضْهُ مِنَ اللَّيْلِ رَوَاهُ ابْنُ مَاجَةَ بِرَقْمِ ١٦٩٠**

17. அறிவிப்பாளர்: உமர் இப்னுல் கத்தாப் ﷺ, நூல்: புகாரி, எண்: 1
18. அறிவிப்பாளர்: ஹஃப்ஸா ﷺ, நூல்: சுனன் அபூ தாவூத், எண்: 2098.
19. அறிவிப்பாளர்: ஹஃப்ஸா ﷺ, நூல்: சுனன் நசாயி, எண்: 2291.

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: யார் ஒருவர் இரவிலேயே நோன்பை கடமையாக்கிக் கொள்ளவில்லையோ அவருக்கு நோன்பே இல்லை.[20]

ஒருவர் காலையில் எழுந்ததிலிருந்து ஏதும் உண்ணாமல், பருகாமல் இருந்துவிட்டு, பிறகு, நோன்பு நோற்கிறேன் என்று நிய்யத் செய்தால் நஃபில் (-உபரியான) நோன்பு நிறைவேறிவிடும். ஆனால், வாஜிப் (-கடமையான) நோன்பு நிறைவேறாது.

عَنْ عَائِشَةَ رضي الله عنها أُمِّ الْمُؤْمِنِينَ قَالَتْ دَخَلَ عَلَيَّ النَّبِيُّ ﷺ ذَاتَ يَوْمٍ فَقَالَ هَلْ عِنْدَكُمْ شَيْءٌ فَقُلْنَا لَا قَالَ فَإِنِّي إِذَنْ صَائِمٌ ثُمَّ أَتَانَا يَوْمًا آخَرَ فَقُلْنَا يَا رَسُولَ اللهِ أُهْدِيَ لَنَا حَيْسٌ فَقَالَ أَرِينِيهِ فَلَقَدْ أَصْبَحْتُ صَائِمًا فَأَكَلَ

رواه مسلم برقم ١٩٥١

ஆயிஷா رضي الله عنها கூறுகிறார்கள்: ஒரு நாள் நபி ﷺ அவர்கள் என்னிடம் வந்தார்கள். உங்களிடம் (உண்பதற்கு) ஏதும் இருக்கின்றதா என்று கேட்டார்கள். நாங்கள் இல்லை என்று கூறினோம். அதற்கு அப்படி என்றால் நான் நோன்பாளி (நோன்பு வைத்துவிடுகிறேன்) என்று கூறினார்கள். பிறகு, வேறு ஒரு நாள் வந்தார்கள். அல்லாஹ்வின் தூதரே! எங்களுக்கு பாயாசம் அன்பளிப்பாக கொடுக்கப்பட்டுள்ளது என்று கூறினோம். அதை எனக்கு காண்பியுங்கள் என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். (நாங்கள் காண்பித்தோம். அப்போது நபி ﷺ அவர்கள் நான் இன்று நோன்பு வைத்திருந்தேன். ஆனால் அதை விட்டுவிடுகிறேன் என்று கூறிவிட்டு அந்த பாயாசத்தை) சாப்பிட்டார்கள்.[21]

ஆக, கடமையான நோன்புகளில் நோன்புடைய நிய்யத்தை கண்டிப்பாக இரவில் வைக்க வேண்டும். பகலில் வைப்பதால் கடமையான நோன்பு நிறைவேறாது.

ரமழான் மாதத்தின் ஆரம்பத்தில் இந்த மாதம் முழுவதும் நான் நோன்பு

20. அறிவிப்பாளர்: ஹஃப்ஸா رضي الله عنها, நூல்: சுனன் இப்னு மாஜா, எண்: 1690.
21. நூல்: முஸ்லிம், எண்: 1951

நோற்பேன் என்று ஒரு முறை நிய்யத் செய்தால் அந்த நிய்யத் போதும். கடமை நிறைவேறி விடும். ஆனால், ஒவ்வொரு நாளும் நிய்யத்தை குறிப்பிட்டு வைப்பது முஸ்தஹப் -விரும்பத்தக்கதாகும்.[22]

---------------------

22. ஒவ்வொரு நோன்புக்கும் தனித்தனியாக நிய்யத் வைக்க வேண்டும் என்பது மிக ஏற்றமான கூற்றாக இருக்கும். அல்லாஹ் மிக அறிந்தவன்.

இரண்டாவது பாடம்

# நோன்பை விடுவதற்கு அனுமதிக்கப்பட்ட காரணங்களும் நோன்பை முறிக்கக்கூடிய காரியங்களும்



இந்த பாடத்தில் இரண்டு சட்டவிளக்கங்கள் உள்ளன.

**முதல் சட்டவிளக்கம்**

## ரமழான் மாதத்தில் நோன்பை விடுவதற்கு அனுமதிக்கப்பட்ட காரணங்கள்

பின்வரும் தகுந்த காரணங்களில் ஒரு காரணம் இருந்தால் ரமழானில் நோன்பை விடுவது அனுமதிக்கப்பட்டதாகும்.

**1). நோய் மற்றும் முதுமை**

தனது நோய் குணமாகிவிடும் என்ற நம்பிக்கை உள்ள நோயாளி நோன்பை விட்டுவிடலாம். பிறகு, சுகம் பெற்றவுடன் விடுபட்ட நாள்களை கணக்கிட்டு அந்த நோன்புகளை மற்ற மாதத்தில் நோற்க வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

فَمَنْ كَانَ مِنْكُمْ مَرِيضًا أَوْ عَلَى سَفَرٍ فَعِدَّةٌ مِنْ أَيَّامٍ أُخَرَ

யார் உங்களில் நோயாளியாக இருப்பாரோ அல்லது பயணத்தில் இருப்பாரோ அவர் தான் விட்ட நோன்புகளை வேறு நாள்களில் கணக்கிட்டு(நோன்பு வைத்துக்) கொள்ளவும். (அல்குர்ஆன் 2:184)

நோய் இருப்பதுடன் நோன்பு நோன்றால் மிகுந்த சிரமம் ஏற்படும் என்று இருந்தால் மட்டும் நோன்பை விடுவதற்கு அனுமதி வழங்கப்படும்.

தனது நோய் குணமாகாது என்ற நிலையில் உள்ள நோயாளியும் வயது முதிர்வால் நோன்பு வைக்கமுடியாமல் போன பலவீனமான

வயோதிகரும் நோன்பை விட்டுவிடுவார்கள். அவர்கள் நோன்பை கழா செய்யவேண்டிய அவசியமில்லை. மாறாக, அவர்கள் ஒவ்வொரு நோன்புக்கு பதிலாக **فدية** - ஃபித்யா - பரிகாரம் கொடுக்க வேண்டும். அதாவது, ஒவ்வொரு நாளின் நோன்புக்காகவும் ஓர் ஏழைக்கு உணவளிக்க வேண்டும். ஏனெனில், இஸ்லாமின் ஆரம்ப காலத்தில் நோன்பு கடமையாக்கப்பட்ட போது நோன்பு வைப்பதில் சலுகை இருந்தது. விரும்பியவர் நோன்பு நோற்கலாம். நோன்பு வைப்பதை சிரமமாக கருதுபவர் நோன்பை விட்டுவிட்டு அதற்கு பதிலாக ஒவ்வொரு நோன்புக்கும் பதிலாக ஓர் ஏழைக்கு உணவளித்துக் கொள்ளலாம். பிறகு, இந்த சலுகை ரத்து செய்யப்பட்டுவிட்டது. ஆகவே, அறவே நோன்பு வைக்க முடியாத நிலை ஒருவருக்கு ஏற்பட்டுவிட்டால் அத்தகைய பலவீனமான நேரத்தில் ஓர் ஏழைக்கு உணவளித்தல் என்பது நோன்புக்கு பதிலாக இருக்கும் என்பதை புரிய முடிகிறது.

**قال الإمام البخاري ﵀ وَأَمَّا الشَّيْخُ الْكَبِيرُ إِذَا لَمْ يُطِقْ الصِّيَامَ فَقَدْ أَطْعَمَ أَنَسٌ بَعْدَ مَا كَبِرَ عَامًا أَوْ عَامَيْنِ كُلَّ يَوْمٍ مِسْكِينًا خُبْزًا وَلَحْمًا وَأَفْطَرَ**

இமாம் புகாரி ﵀ கூறுகிறார்கள்: வயது முதிர்ந்த பெரியவர் நோன்பு வைக்க சக்தி பெறவில்லை என்றால் அவர் ஒவ்வொரு நாள் நோன்புக்கு பகரமாக ஓர் ஏழைக்கு உணவளிக்க வேண்டும். ஏனெனில், அனஸ் ﵁ அவர்கள் தனது முதிர்ந்த வயதில் ஓர் ஆண்டு அல்லது இரண்டு ஆண்டுகள் இப்படித்தான் செய்தார்கள். நோன்பு வைக்க முடியாமல் போனதற்காக ஒவ்வொரு நாளின் நோன்புக்காகவும் ஓர் ஏழைக்கு ரொட்டியையும் இறைச்சியையும் சமைத்து உணவளித்தார்கள்.[23]

ஆகவே, நோய் அல்லது வயது முதிர்வால் முற்றிலும் பலவீனமடைந்து, இனி நோன்பு வைக்கும் அளவிற்கு உடல் வலிமை பெற மாட்டோம் என்ற நிலையில் உள்ளவர்கள் நோன்பை விட்டுவிட்டு ஒவ்வொரு நாள் நோன்புக்குப் பதிலாக கோதுமை அல்லது பேரீச்சம் பழம், அல்லது அரிசி அல்லது உள்ளூரில் உணவாக எடுத்துக்கொள்ளப்படுகின்ற

23. நூல்: புகாரி, அத்தியாயம்: நோன்பு

தானியம் எதுவோ அதிலிருந்து அரை ஸாஃ ஏழைக்கு கொடுக்க வேண்டும்.

ஒரு ஸாஃ என்பது இரண்டே கால் கிலோ ஆகும். ஆகவே, அரை ஸாஃ என்பது ஏறக்குறைய ஒரு கிலோ நூற்றி இருபத்தி ஐந்து கிராம் ஆகும்.

ஒரு நோயாளி தனக்கு முடியாமல் இருந்தும் முயற்சி எடுத்து நோன்பு வைத்தால் அவருடைய நோன்பு சரியாகவும் ஆகிவிடும். அந்த நோன்பு அவருக்கு போதுமானதாகவும் ஆகிவிடும்.

**2). பயணம்**

நோன்பை விடுவதற்கு அனுமதி உள்ள காரணங்களில் ஒன்று பயணமாகும். ஒருவர் ரமழானில் பயணம் செய்தால், நோன்பை விட்டுவிட்டு வேறு நாள்களில் அந்த நோன்பை கழா செய்து கொள்ளலாம்.

அல்லாஹ் கூறுகின்றான்:

فَمَنْ كَانَ مِنْكُمْ مَرِيضًا أَوْ عَلَى سَفَرٍ فَعِدَّةٌ مِنْ أَيَّامٍ أُخَرَ

யார் உங்களில் நோயாளியாக இருப்பாரோ அல்லது பயணத்தில் இருப்பாரோ அவர் தான் விட்ட நோன்புகளை வேறு நாள்களில் கணக்கிட்டு (நோன்பு வைத்துக்) கொள்ளவும். (அல்குர்ஆன் 2:184)

فَمَنْ شَهِدَ مِنْكُمُ الشَّهْرَ فَلْيَصُمْهُ وَمَنْ كَانَ مَرِيضًا أَوْ عَلَى سَفَرٍ فَعِدَّةٌ مِنْ أَيَّامٍ أُخَرَ

ஆகவே, உங்களில் எவர் அம்மாதத்தை அடைகிறாரோ அவர் அதில் நோன்பு நோற்கவும். ஆனால் (அக்காலத்தில் உங்களில்) யாராவது நோயாளியாகவோ அல்லது பிரயாணத்திலோ இருந்தால் (ரமழான் அல்லாத) மற்ற நாள்களில் (விட்டுப்போன நாள்களின் நோன்பைக்) கணக்கிட்டு (நோற்று) விடவும். (அல்குர்ஆன் 2:185)

பயணத்தில் நோன்பு வைப்பதைப் பற்றி ஒருவர் நபி ﷺ அவர்களிடம் கேட்டார். அதற்கு நபி அவர்கள் கூறினார்கள்:

**فَقَالَ إِنْ شِئْتَ فَصُمْ وَإِنْ شِئْتَ فَأَفْطِرْ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨٠٧**

நீர் விரும்பினால் நோன்பிருப்பீராக! நீர் விரும்பினால் நோன்பை விட்டுவிடுவீராக![24]

**عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ خَرَجَ فِي رَمَضَانَ مِنْ الْمَدِينَةِ وَمَعَهُ عَشَرَةُ آلَافٍ وَذٰلِكَ عَلَى رَأْسِ ثَمَانِ سِنِينَ وَنِصْفٍ مِنْ مَقْدَمِهِ الْمَدِينَةَ فَسَارَ هُوَ وَمَنْ مَعَهُ مِنْ الْمُسْلِمِينَ إِلَى مَكَّةَ يَصُومُ وَيَصُومُونَ حَتَّى بَلَغَ الْكَدِيدَ وَهُوَ مَاءٌ بَيْنَ عُسْفَانَ وَقُدَيْدٍ أَفْطَرَ وَأَفْطَرُوا رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٣٩٤١.**

நபி ﷺ அவர்கள் ரமளான் மாதத்தில் தம்முடன் முஸ்லிம்கள் பத்தாயிரம் பேரை அழைத்துக் கொண்டு (மக்காவை வெற்றி கொள்வதற்காக) மதீனாவிலிருந்து மக்கா நோக்கிப் புறப்பட்டார்கள். இது நபி அவர்கள் மதீனாவிற்கு (ஹிஜ்ரத் செய்து) வருகை தந்ததிலிருந்து எட்டு ஆண்டுகள் ஆறு மாதங்கள் முடிந்த போது நடைபெற்றது. நபி அவர்களும் நோன்பு நோற்றவர்களாக, அவர்களுடன் இருந்த முஸ்லிம்களும் நோன்பு நோற்றவர்களாக பயணம் செய்தார்கள். இறுதியில் 'கதீத்' என்னுமிடத்திற்குச் சென்று சேர்ந்தார்கள். இந்த இடம் உஸ்ஃபானுக்கும் குதைதுக்கும் இடையே உள்ள ஒரு நீர் நிலையாகும் -(அங்கு) நபி ﷺ அவர்கள் நோன்பைவிட்டு விட்டார்கள். மக்களும் நோன்பை விட்டு விட்டார்கள்.[25]

எந்த பயணத்தில் தொழுகையை சுருக்கி தொழுவது கூடுமோ அத்தகைய பயணத்தில் நோன்பை விடுவது ஆகுமாகும். அதாவது, நாற்பத்தி எட்டு மைல்கள், (சற்றேறக்குறைய) என்பது கிலோ மீட்டர் தூரம் உள்ள பயணத்தில் நோன்பை விடுவது கூடும்.

24. அறிவிப்பாளர்: ஆயிஷா ரலி, நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 1807

25. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ரலி, நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 3941.

பயணம் அனுமதிக்கப்பட்டதாக இருக்க வேண்டும். உதாரணமாக கல்வி, வியாபாரம், உறவுகளை சந்திப்பது, அல்லது இவை போன்ற வேறு ஒரு ஹலாலான காரணமாக இருக்க வேண்டும். பாவத்திற்கான பயணமாக இருந்தால் அல்லது நோன்பை விடுவதற்கு தந்திரம் செய்வதற்கான பயணமாக இருந்தால் அந்த பயணத்தில் நோன்பை விடுவதற்கு அனுமதி இல்லை.

பயணி தனது பயணத்தில் நோன்பு வைத்தால் அந்த நோன்பு அவருக்கு சரியாகிவிடும், அதுவே அவருக்கு போதுமானதாகிவிடும்.

**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﷛ قَالَ كُنَّا نُسَافِرُ مَعَ النَّبِيِّ ﷺ فَلَمْ يَعِبْ الصَّائِمُ عَلَى الْمُفْطِرِ وَلَا الْمُفْطِرُ عَلَى الصَّائِمِ رواه البخاري برقم ١٨١١**

அனஸ் இப்னு மாலிக் ﷛ கூறுகிறார்கள்: நாங்கள் நபி ﷺ அவர்களுடன் பயணம் செய்வோம். நோன்பு வைக்காத நபரை நோன்பாளி குறை கூறமாட்டார். அவ்வாறே, நோன்பாளியை நோன்பு வைக்காதவர் குறை கூறமாட்டார்.[26]

ஆனால், நோன்பு வைப்பது யாருக்கு மிகுந்த சிரமத்தை கொடுக்குமோ அல்லது தீங்கை ஏற்படுத்துமோ அவர் பயணத்தில் நோன்பை விடுவதுதான் அவருக்கு மிகச் சிறந்ததாகும். இந்த நேரத்தில் அவர் தனக்குள்ள சலுகையை பயன்படுத்துவதுதான் ஏற்றமானதாகும்.

**وَعَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللّٰهِ ﷛ قَالَ كَانَ رَسُولُ اللّٰهِ ﷺ فِي سَفَرٍ فَرَأَى زِحَامًا وَرَجُلًا قَدْ ظُلِّلَ عَلَيْهِ فَقَالَ مَا هَذَا فَقَالُوا صَائِمٌ فَقَالَ لَيْسَ مِنْ الْبِرِّ الصَّوْمُ فِي السَّفَرِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨١٠**

ஒரு சமயம் ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் பயணத்தில் இருந்தார்கள். அப்போது, மக்கள் கூட்டத்தையும் ஒருவர் நிழலில் வைக்கப்பட்டிருப்பதையும் பார்த்து இவருக்கு என்ன ஆனது? என்று

26. நூல்: புகாரி, எண்: 1811

கேட்டார்கள். இவர் நோன்பாளி என்று மக்கள் கூறினார்கள். பயணத்தில் நோன்பு வைப்பது நன்மைகளில் உள்ளதல்ல என்று ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்.[27]

### 3). மாதவிடாய் இன்னும் பிரசவ உதிரப்போக்கு

எந்த பெண்ணுக்கு ரமழான் மாதத்தில் மாதவிடாய் அல்லது பிரசவ உதிரப்போக்கு ஏற்பட்டு விட்டதோ அவள் கண்டிப்பாக நோன்பை விட்டுவிட வேண்டும். அவள் இந்த நிலையில் நோன்பு நோற்பது ஹராம் - பாவமாகும். அவள் நோன்பு வைத்தால் அந்த நோன்பு சரியானதாக ஆகாது. அவள் தான் தவறவிட்ட நோன்பை பிறகு கழா - நிறைவேற்ற வேண்டும்.

**عَنْ أَبِي سَعِيدٍ ﵁ قَالَ قَالَ النَّبِيُّ ﷺ أَلَيْسَ إِذَا حَاضَتْ لَمْ تُصَلِّ وَلَمْ تَصُمْ فَذٰلِكَ نُقْصَانُ دِينِهَا رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨١٥**

நபி ﷺ கூறினார்கள்: பெண்ணுக்கு மாதவிடாய் வந்துவிட்டால் அவள் தொழாமல், நோன்பு வைக்காமல் இருப்பதில்லையா? அதுதான் அவளுடைய மார்க்கம் குறைவாக இருப்பதாகும்.[28]

**عَنْ مُعَاذَةَ ﵂ أَنَّ امْرَأَةً قَالَتْ لِعَائِشَةَ ﵂ أَتَجْزِي إِحْدَانَا صَلَاتُهَا إِذَا طَهُرَتْ فَقَالَتْ أَحَرُورِيَّةٌ أَنْتِ كُنَّا نَحِيضُ مَعَ النَّبِيِّ ﷺ فَلَا يَأْمُرُنَا بِهِ أَوْ قَالَتْ فَلَا نَفْعَلُهُ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٣١٠**

ஆயிஷா ﵂ அவர்களிடம், “எங்களில் ஒருத்தி சுத்தமாகும்போது தொழுதால் போதுமா (அல்லது மாதவிடாய் காலத்திலும் தொழ வேண்டுமா) என்று ஒரு பெண் கேட்டார். ஆயிஷா ﵂ கூறினார்கள்: நீ என்ன காரிஜிய்யா பெண்ணா? நாங்கள் நபி ﷺ அவர்களுடன் இருந்தோம். எங்களுக்கு மாதவிடாய் வரும். எங்களை அவர்கள்

27. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 1810.
28. அறிவிப்பாளர்: அபூ சயீது ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 1815.

தொழும்படி ஏவ மாட்டார்கள். (அல்லது ஆயிஷா இப்படி கூறினார்கள்: நாங்கள் அதை (தொழுகையை) செய்ய மாட்டோம்.)[29]

**4). கர்ப்பம் தரித்திருப்பது, குழந்தைக்கு பாலூட்டுவது.**

ஒரு பெண் கர்ப்பம் தரித்திருந்து, நோன்பு வைப்பதால் தனக்கு அல்லது தனது குழந்தைக்கு ஆபத்து ஏற்படும் என்று பயந்தால் அவள் நோன்பை விட்டுவிடலாம்.

அவ்வாறே, குழந்தைக்கு பால் கொடுக்கின்ற பெண், தான் நோன்பு வைப்பதால் குழந்தைக்கு பால் கொடுப்பது சிரமமாகிவிடும் என்று பயந்தால், அல்லது நோன்பு வைத்துவிட்டு பால் கொடுக்காமல் இருந்தால் குழந்தைக்கு சிரமமாகிவிடும் என்று பயந்தால் அவள் நோன்பை விட்டுவிடுவது கூடும்.

**يروى ابْنُ مَاجَةَ بِرَقْمِ ١٦٥٧ وفيه وَقَالَ عَلِيُّ بْنُ مُحَمَّدٍ مِنْ بَنِي عَبْدِ اللّٰهِ بْنِ كَعْبٍ ﷺ قَالَ أَغَارَتْ عَلَيْنَا خَيْلُ رَسُولِ اللّٰهِ ﷺ فَأَتَيْتُ رَسُولَ اللّٰهِ ﷺ وَهُوَ يَتَغَدَّى فَقَالَ ادْنُ فَكُلْ قُلْتُ إِنِّي صَائِمٌ قَالَ اجْلِسْ أُحَدِّثْكَ عَنِ الصَّوْمِ إِنَّ اللّٰهَ عَزَّ وَجَلَّ وَضَعَ عَنِ الْمُسَافِرِ شَطْرَ الصَّلَاةِ وَعَنِ الْمُسَافِرِ وَالْحَامِلِ وَالْمُرْضِعِ الصَّوْمَ.**

இமாம் இப்னு மாஜா ரஹ் அறிவிக்கின்ற ஒரு அறிவிப்பில் வருவதாவது: அப்துல்லாஹ் இப்னு கஃஃப் ரழி குடும்பத்தைச் சேர்ந்த அலி இப்னு முஹம்மது ரழி கூறுகிறார்: ரசூலுல்லாஹ் ﷺ அவர்களுடைய வீரர்கள் எங்கள் மீது போர் தொடுத்தார்கள். தொடர்ந்து அவர் கூறினார்: ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது நான் அவர்களிடம் வந்தேன்.

நபி ﷺ அவர்கள் அருகில் வா, சாப்பிடு என்று என்னிடம் கூறினார்கள். நான் நோன்பாளி என்று கூறினேன். அவர்கள் கூறினார்கள்: உட்காரு!

29. அறிவிப்பாளர்: முஆதா ரழி, நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 310

நோன்பைப் பற்றி நான் உனக்கு கூறுகின்றேன். நிச்சயமாக அல்லாஹ் பயணிக்கு தொழுகையில் பாதியை தளர்த்தி விட்டான். இன்னும் பயணிக்கும், கர்ப்பிணிக்கும், பாலூட்டுகின்ற பெண்ணிற்கும் நோன்பை தளர்த்தி விட்டான்.[30]

கர்ப்பம் தரித்த பெண் அல்லது பாலூட்டுகின்ற பெண் தமது உயிருக்கு பயந்து நோன்பை விட்டிருந்தால் அவ்விருவரும் நோன்பை கழா செய்தால் மட்டும் போதும். குழந்தையின் உயிருக்கு பயந்து நோன்பை விட்டிருந்தால் நோன்பை கழாவும் செய்ய வேண்டும். அத்துடன் ஃபித்யா - பரிகாரமும் கொடுக்க வேண்டும்.

பாலூட்டுகின்ற பெண் தான் நோன்பு வைப்பதால் தனது பால்குடி குழந்தைக்கு பாதிப்பு ஏற்படும் என்று பயந்தால், கர்ப்பம் தரித்துள்ள பெண் வயிற்றில் உள்ள தனது சிசுவிற்கு பாதிப்பு ஏற்படும் என்று பயந்தால் அவ்விருவரும் நோன்பை விட்டுவிடுவார்கள். பிறகு, அந்த நோன்புகளை கழா செய்வதுடன் ஒவ்வொரு நாளின் நோன்புக்காகவும் (ஓர் ஏழைக்கு) உணவளிப்பார்கள்.

இப்னு அப்பாஸ் ﷻ கூறுகிறார்கள்:

**وَالْحُبْلَى وَالْمُرْضِعُ إِذَا خَافَتَا قَالَ أَبُو دَاوُد يَعْنِي عَلَى أَوْلَادِهِمَا أَفْطَرَتَا وَأَطْعَمَتَا**

**رواه أبو داود برقم ١٩٧٤**

கர்ப்பிணியும் பாலூட்டுபவளும் தங்கள் குழந்தைகள் மீது பயந்தால் அவ்விருவரும் நோன்பை விட்டுவிடுவார்கள்; உணவளிப்பார்கள்.[31]

மேற்கூறப்பட்ட சட்டங்களின் சுருக்கமாவது: நோன்பை விடுவதை ஆகுமாக்கக்கூடிய காரணங்கள் நான்காகும். 1). பயணம். 2). நோய். 3). மாதவிடாய், பிரசவ உதிரப்போக்கு. 4). கர்ப்பிணி, மற்றும் பாலூட்டுகின்ற பெண்கள் விஷயத்தில் கூறப்பட்டதைப் போன்று தங்கள் உயிர்கள் மீதோ அல்லது குழந்தைகள் மீதோ ஆபத்தை பயப்படுதல்.

30. அறிவிப்பாளர்: அலி இப்னு முஹம்மது ﷺ, நூல்: இப்னு மாஜா, எண்: 1657.
31. நூல்: அபூ தாவூத், எண்: 1974

மூன்றாவது சட்டவிளக்கம்

## நோன்பை முறிக்கின்ற காரியங்கள்

நோன்பை முறித்து வீணாக்கிவிடுகின்ற காரியங்கள் பின்வருமாறு:

**1). வேண்டுமென்றே உண்பது அல்லது குடிப்பது.**

ஒருவர் தான் நோன்பு நோற்று இருப்பதை அறிந்துகொண்டே வேண்டுமென்று சாப்பிட்டுவிட்டால் அல்லது குடித்துவிட்டால் அவருடைய நோன்பு முறிந்து வீணாகிவிடும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَكُلُوا وَاشْرَبُوا حَتّٰى يَتَبَيَّنَ لَكُمُ الْخَيْطُ الْأَبْيَضُ مِنَ الْخَيْطِ الْأَسْوَدِ مِنَ الْفَجْرِ ثُمَّ أَتِمُّوا الصِّيَامَ إِلَى اللَّيْلِ

இன்னும் இருள் நீங்கி விடியற்காலை (ஃபஜ்ர்) ஆகிவிட்டது என்று உங்களுக்குத் தெளிவாகும் வரை புசியுங்கள், பருகுங்கள். (கிழக்கு வெளுத்த) பின்பிலிருந்து இரவு (ஆரம்பமாகும்) வரை (மேலே கூறியவற்றைத் தவிர்த்து) நோன்பை முழுமையாக்குங்கள்.

(அல்குர்ஆன் 2:187)

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ نَسِيَ وَهُوَ صَائِمٌ فَأَكَلَ أَوْ شَرِبَ فَلْيُتِمَّ صَوْمَهُ فَإِنَّمَا أَطْعَمَهُ اللهُ وَسَقَاهُ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٩٥٢

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: யார் தான் நோன்பாளியாக இருக்கின்றபோது (அதை) மறந்து, சாப்பிட்டு விட்டாலோ அல்லது குடித்து விட்டாலோ அவர் தனது நோன்பை முழுமைப்படுத்தவும். அவருக்கு உணவளித்ததும் நீர் புகட்டியதும் அல்லாஹ்தான்.[32]

**سَعُوط** - ஸஊத், மூக்கில் மருந்திடுவதாலும் நோன்பு வீணாகிவிடும். அவ்வாறே, குடலுக்குள் செல்கின்ற ஒவ்வொன்றின் மூலமும் நோன்பு

32. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 1952

முறிந்துவிடும். அது வாய் அல்லாத வேறு வழியினால் குடலுக்கு சென்றாலும் சரி. உண்பதும் குடிப்பதும் எந்த நோக்கத்திற்காக செய்யப்படுகின்றதோ அந்த நோக்கத்தை தரக்கூடிய எல்லா காரியங்களும் நோன்பை வீணாக்கிவிடும்.

**2). உடலுறவு கொள்வது.**

யார் நோன்பு நோற்ற நிலையில் தனது மனைவியுடன் உடலுறவு கொண்டு விடுவாரோ அவருடைய நோன்பு 'பாத்தில்' -வீணாகிவிடும். அவர் இதற்காக மனம் வருந்தி அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு கேட்க வேண்டும். தான் முறித்த நோன்பை 'கழா' -நிறைவேற்றுவதுடன் கஃப்பாரா -குற்றப் பரிகாரமும் அவர் செய்தாக வேண்டும்.

அந்த குற்றப் பரிகாரம்: அவர் ஓர் அடிமையை உரிமையிடவேண்டும். அதற்கு அவரிடம் வசதி இல்லையென்றால் அவர் தொடர்ந்து, ஒரு நாள் விடாமல் இரண்டு மாதங்கள் நோன்பு நோற்க வேண்டும். அதற்கும் அவருடைய உடலில் சக்தி இல்லையென்றால் அவர் அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும்.

**عن أَبَي هُرَيْرَةَ ﵁ قَالَ بَيْنَمَا نَحْنُ جُلُوسٌ عِنْدَ النَّبِيِّ ﷺ إِذْ جَاءَهُ رَجُلٌ فَقَالَ يَا رَسُولَ اللهِ هَلَكْتُ قَالَ مَا لَكَ قَالَ وَقَعْتُ عَلَى امْرَأَتِي وَأَنَا صَائِمٌ فَقَالَ رَسُولُ اللهِ ﷺ هَلْ تَجِدُ رَقَبَةً تُعْتِقُهَا قَالَ لَا قَالَ فَهَلْ تَسْتَطِيعُ أَنْ تَصُومَ شَهْرَيْنِ مُتَتَابِعَيْنِ قَالَ لَا فَقَالَ فَهَلْ تَجِدُ إِطْعَامَ سِتِّينَ مِسْكِينًا قَالَ لَا قَالَ فَمَكَثَ النَّبِيُّ ﷺ فَبَيْنَا نَحْنُ عَلَى ذٰلِكَ أُتِيَ النَّبِيُّ ﷺ بِعَرَقٍ فِيهَا تَمْرٌ وَالْعَرَقُ الْمِكْتَلُ قَالَ أَيْنَ السَّائِلُ فَقَالَ أَنَا قَالَ خُذْهَا فَتَصَدَّقْ بِهِ فَقَالَ الرَّجُلُ أَعَلَى أَفْقَرَ مِنِّي يَا رَسُولَ اللهِ فَوَاللّٰهِ مَا بَيْنَ لَابَتَيْهَا يُرِيدُ الْحَرَّتَيْنِ أَهْلُ بَيْتٍ أَفْقَرُ مِنْ أَهْلِ بَيْتِي فَضَحِكَ النَّبِيُّ ﷺ حَتّٰى بَدَتْ أَنْيَابُهُ ثُمَّ قَالَ أَطْعِمْهُ أَهْلَكَ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨٠٠**

நாங்கள் நபி ﷺ அவர்களுடன் அமர்ந்திருந்தபோது அவர்களிடம் ஒருவர் வந்து, 'இறைத்தூதர் அவர்களே! நான் அழிந்து விட்டேன்!' என்றார். நபி ﷺ அவர்கள் 'உமக்கு என்ன நேர்ந்தது?' என்று கேட்டார்கள். நான் நோன்பு வைத்துக்கொண்டு என் மனைவியுடன் கூடிவிட்டேன்! என்று அவர் சொன்னார்.

நபி ﷺ அவர்கள், 'ஓர் அடிமையை விடுதலை செய்வதற்கு உன்னிடம் வசதி இருக்கிறதா?' என்று கேட்டார்கள். அவர் 'இல்லை!' என்றார். தொடர்ந்து இரண்டு மாதங்கள் நீர் நோன்பு நோற்க சக்தி பெறுவீரா?' என்று நபி ﷺ அவர்கள் கேட்டார்கள். அவர், 'இல்லை!' என்றார்.

அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க உமக்கு வசதி இருக்கிறதா?' என்று நபி ﷺ அவர்கள் கேட்டார்கள். அதற்கும் அவர், 'இல்லை!' என்றார். நபி ﷺ அவர்களிடம் ஓர் 'அரக்' அளவு பேரீச்சம் பழம் கொண்டு வரப்பட்டது. நபி ﷺ அவர்கள் 'கேள்வி கேட்டவர் எங்கே?' என்றார்கள். நான்தான் என்று அவர் கூறினார். இதைப் பெற்றுக் கொள்வீராக, இன்னும் இவற்றை தர்மம் செய்துவிடுவீராக!' என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். அதற்கு அம்மனிதர், 'ரசூலுல்லாஹ் அவர்களே! என்னை விட ஏழையாக இருப்பவர்களுக்கா (நான் தர்மம் செய்ய வேண்டும்)? மதீனாவின் (கருங்கற்கள் நிறைந்த) இரண்டு மலைகளுக்கும் இடைப்பட்ட பகுதியில் என் குடும்பத்தினரைவிட பரம ஏழைகளான குடும்பம் வேறு யாருமில்லை!' என்று கூறினார். நபி ﷺ அவர்கள் தங்களின் கடைவாய் பற்கள் தெரியும் அளவுக்குச் சிரித்தார்கள். பிறகு 'இதை உமது குடும்பத்தாருக்கே உண்ணக் கொடுப்பீராக!' என்றார்கள்.[33]

உடலுறவு நோன்பை வீணாக்கி முறித்துவிடுவது போன்றே சுய விருப்பத்துடன் ஒருவர் விந்தை வெளியேற்றினாலும் அவருடைய நோன்பு முறிந்துவிடும். உதாரணமாக, மனைவியை தொடுவது, முத்தமிடுவது, விளையாடுவது போன்ற செயல்களில் ஈடுபட்டு அவருக்கு விந்து வெளியேறிவிடுமேயானால் அவருடைய நோன்பு முறிந்து வீணாகிவிடும். இவர் அந்த நோன்பை கழா - நிறைவேற்ற வேண்டும். ஆனால், குற்றப்பரிகாரம் செய்ய வேண்டிய அவசியமில்லை. நேரடியாக

33. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 1800.

உடலுறவு கொள்வதினால்தான் குற்றப்பரிகாரம் கட்டாயமாகும். நோன்பிருந்த நிலையில் உடலுறவு வைக்கும்போதுதான் குற்றப் பரிகாரம் கொடுப்பதை மார்க்கம் கடமையாக்கி இருக்கின்றது.

ஒருவருக்கு தூக்கத்தில் ஸ்கலிதம் ஏற்பட்டுவிட்டால் அல்லது எவ்வித இச்சையும் இன்றி விந்து வெளியேறிவிட்டால் அவருடைய நோன்பு முறிந்துவிடாது. ஏனெனில், இதில் அவருக்கு எவ்வித சுய நாட்டமும் விருப்பமும் இருக்கவில்லை.

**3). வேண்டுமென்றே வாந்தி எடுப்பது.**

ஒருவர் தான் சாப்பிட்ட உணவை அல்லது குடிபானத்தை குடலிலிருந்து வாய்வழியாக வேண்டுமென்றே வெளியேற்றினால் அவருடைய நோன்பு முறிந்துவிடும். ஆனால், அவரை அறியாமல் தானாக, வாந்தி வருமேயானால் நோன்பு முறியாது.

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ مَنْ ذَرَعَهُ الْقَيْءُ فَلَا قَضَاءَ عَلَيْهِ وَمَنْ اسْتَقَاءَ فَعَلَيْهِ الْقَضَاءُ رَوَاهُ ابن ماجه برقم ١٦٦٦**

நபி ﷺ கூறினார்கள்: யாருக்கு வாந்தி தானாக வந்ததோ அவர் மீது நோன்பை கழா செய்ய அவசியமில்லை. யார் வேண்டுமென்றே வாந்தி எடுப்பாரோ அவர் நோன்பை கழா செய்யட்டும்.[34]

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ مَنْ ذَرَعَهُ الْقَيْءُ فَلَيْسَ عَلَيْهِ قَضَاءٌ وَمَنْ اسْتَقَاءَ عَمْدًا فَلْيَقْضِ رَوَاهُ التِّرْمِذِيُّ بِرَقْمِ ٦٥٣**

நபி ﷺ கூறினார்கள்: யாருக்கு வாந்தி தானாக வந்ததோ அவர் மீது நோன்பை கழா செய்ய அவசியமில்லை. யார் வேண்டுமென்றே வாந்தி எடுப்பாரோ அவர் நோன்பை கழா செய்யட்டும்.[35]

34. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: சுனன் இப்னு மாஜா, எண்: 1666.
35. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: ஜாமிவுத் திர்மிதி, எண்: 653.

### 4). ஹிஜாமா -இரத்தம் குத்தி எடுப்பது

அதாவது நரம்புகள் அல்லாமல் தோளிலிருந்து இரத்தத்தை வெளியேற்றுவது ஹிஜாமா எனப்படும். ஒருவர் நோன்பு நோற்ற நிலையில் ஹிஜாமா செய்தால் அவருடைய நோன்பு முறிந்துவிடும்.



عَنْ ثَوْبَانَ ﷺ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ أَفْطَرَ الْحَاجِمُ وَالْمَحْجُومُ

رواه أبو داود برقم ٢٠٢٣

இரத்தம் குத்தி எடுத்தவரும் எடுக்கப்பட்டவரும் நோன்பை முறித்து விடுவார் என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[36]

ஒருவர் வாயினால் உறிஞ்சாமல், ஒரு கருவியினால் ஒருவருக்கு இரத்தம் குத்தி எடுத்தால் இப்போது எடுத்தவருடைய நோன்பு முறியாது. யாரின் உடலிலிருந்து இரத்தம் வெளியேற்றப்பட்டதோ அவருடைய நோன்புதான் முறிந்துவிடும். அல்லாஹ் மிக அறிந்தவன்.

இரத்தம் குத்தி எடுப்பதற்கு உள்ள சட்டம்தான் இரத்ததானம் செய்வதற்கும். ஆகவே, இரத்ததானம் செய்வதற்காக நரம்புகளில் இருந்து ஒருவர் இரத்தம் எடுத்தாலும் அவருடைய நோன்பு வீணாகிவிடும்.

ஒருவருக்கு காயத்திலிருந்து இரத்தம் வெளியேறிவிட்டால் அல்லது பல் கழட்டப்பட்டதால் அல்லது மூக்கு உடைந்ததால் இரத்தம் வெளியேறினால் அது நோன்பை பாதிக்காது. ஏனெனில், இது ஹிஜாமா அல்ல. இன்னும் ஹிஜாமாவை போன்றதும் அல்ல.

### 5). மாதவிடாய் இன்னும் பிரசவ உதிரப்போக்கு

ஒரு பெண் தனது மாதவிடாய் இரத்தத்தை அல்லது பிரசவ உதிரப்போக்கை பார்த்துவிட்டால் அவளுடைய நோன்பு முறிந்து விடும். அவள் அந்த நோன்புகளை கழா - நிறைவேற்ற வேண்டும்.

36. அறிவிப்பாளர்: ஸவ்பான் ﷺ, நூல்: அபூ தாவூத், எண்: 2023

عَنْ أَبِي سَعِيدٍ ﷺ قَالَ قَالَ النَّبِيُّ ﷺ أَلَيْسَ إِذَا حَاضَتْ لَمْ تُصَلِّ وَلَمْ تَصُمْ
رَوَاهُ الْبُخَارِيّ بِرَقْمِ ١٨١٥

நபி ﷺ கூறினார்கள்: பெண்ணுக்கு மாதவிடாய் வந்துவிட்டால் அவள் தொழாமல், நோன்பு வைக்காமல் இருப்பதில்லையா?[37]

### 6). நோன்பை விடுகிறேன் என்று மனதில் எண்ணம் வைப்பது.

நோன்பு திறப்பதற்குரிய நேரம் வருவதற்கு முன்னர் ஒருவர் தனது மனதில், தான் நோன்பை விடுவதாக எண்ணிவிட்டால் அவருடைய நோன்பு முறிந்துவிடும். அவர் நோன்பை முறிக்கக்கூடிய காரியத்தை செயலால் செய்யவில்லை என்றாலும் சரி. ஏனெனில், நிய்யத் - எண்ணம் என்பது நோன்பின் இரண்டு ருக்னுகளில் ஒன்றாகும். ஆகவே, யார் நோன்பைவிட வேண்டும் என்ற நாட்டத்தில், வேண்டுமென்றே தனது நிய்யத்தை முறித்து விடுவாரோ அவருடைய நோன்பு முறிந்துவிடும்.

### 7). மதம் மாறுவது.

நோன்பாளி ஒருவர் இஸ்லாமிய மார்க்கத்தை விட்டு வெளியேறிவிட்டால் அவருடைய நோன்பு முறிந்துவிடும். ஏனெனில், மதம் மாறுவது வணக்க வழிபாட்டுக்கு முரணானதாகும். அவர் மீண்டும் இஸ்லாமிய மார்க்கத்தை ஏற்றுக்கொண்டால் அந்த நோன்பை அவர் கழா - நிறைவேற்ற வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

لَئِنْ أَشْرَكْتَ لَيَحْبَطَنَّ عَمَلُكَ

(நபியே!) நீர் இணைவைத்தால் உமது அமல்கள் நிச்சயமாக அழிந்துவிடும். (அல்குர்ஆன் 39:65)

---------------------

37. அறிவிப்பாளர்: அபூ சயீது ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 1815.

மூன்றாவது பாடம்

مُسْتَحَبَّاتِ الصِّيَامِ وَمَكْرُوهَاتُهُ

# நோன்பில் விரும்பத்தக்க காரியங்களும் வெறுக்கப்பட்ட காரியங்களும்

இந்த பாடத்தில் இரண்டு சட்டவிளக்கங்கள் உள்ளன.

**முதலாவது சட்டவிளக்கம்**

## நோன்பில் விரும்பத்தக்க காரியங்கள்

நோன்பாளி நோன்பிருக்கும்போது பின்வருகின்ற காரியங்களை பேணுவது விரும்பத்தக்கதும் சிறப்பானதும் ஆகும்.

அவை:

1). அதிகாலை விடிவதற்கு சற்று முன்பு இரவின் இறுதிப் பகுதியில், நோன்பிருப்பதற்காக ஏதும் உணவு உட்கொள்வது முஸ்தஹப் - விரும்பத்தக்கதாகும்.

இதை **سُحُور** - “ஸுஹூர்” ஸஹர் உணவு என்று கூறப்படும்.

**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﷺ قَالَ قَالَ النَّبِيُّ ﷺ تَسَحَّرُوا فَإِنَّ فِي السَّحُورِ بَرَكَةً رواه البخاري برقم ١٧٨٩**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: நீங்கள் ஸஹர் உணவு சாப்பிடுங்கள்! ஸஹர் உணவில் பரகத் - அபிவிருத்தி இருக்கின்றது.[38]

ஸுஹூருடைய நேரம் இரவின் நடுப்பகுதியிலிருந்து அதிகாலை உதிக்கின்ற வரை ஆகும். ஸுஹூர் உணவிற்கு அதிகம், குறைவு என்று குறிப்பிட்ட அளவு இல்லை. ஸுஹூர் உடைய நிய்யத்துடன் ஒரு மிடறு தண்ணீர் குடித்தாலும் இந்த சுன்னா நிறைவேறிவிடும்.

38. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ؓ, நூல்: புகாரி, எண்: 1789

**2). ஸுஹூரை தாமதப்படுத்தி உண்பது முஸ்தஹப் ஆகும்.**

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﵁ أَنَّ زَيْدَ بْنَ ثَابِتٍ ﵁ حَدَّثَهُ أَنَّهُمْ تَسَحَّرُوا مَعَ النَّبِيِّ ﷺ ثُمَّ قَامُوا إِلَى الصَّلَاةِ قُلْتُ كَمْ بَيْنَهُمَا قَالَ قَدْرُ خَمْسِينَ أَوْ سِتِّينَ يَعْنِي آيَة رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٥٤١

நிச்சயமாக அவர்கள் (-நபித்தோழர்கள்) நபி ﷺ அவர்களுடன் ஸுஹூர் (-ஸஹர் உணவு) சாப்பிட்டார்கள். பிறகு தொழுகைக்கு தயாரானார்கள் என்று சைது இப்னு ஸாபித் ﵁ கூறினார். நான் கேட்டேன்: இரண்டிற்கும் இடையில் எவ்வளவு நேரம் இருந்தது? அவர் கூறினார்: ஐம்பது அல்லது அறுபது வசனங்கள் (ஓதுகின்ற) அளவு.[39]

وَعَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﵁ أَنَّ نَبِيَّ اللهِ ﷺ وَزَيْدَ بْنَ ثَابِتٍ تَسَحَّرَا فَلَمَّا فَرَغَا مِنْ سَحُورِهِمَا قَامَ نَبِيُّ اللهِ ﷺ إِلَى الصَّلَاةِ فَصَلَّى قُلْنَا لِأَنَسٍ كَمْ كَانَ بَيْنَ فَرَاغِهِمَا مِنْ سَحُورِهِمَا وَدُخُولِهِمَا فِي الصَّلَاةِ قَالَ قَدْرُ مَا يَقْرَأُ الرَّجُلُ خَمْسِينَ آيَةً رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٥٤٢.

நபி ﷺ அவர்களும் சைது இப்னு ஸாபித் ﵁ அவர்களும் சஹர் உணவு சாப்பிட்டார்கள். சஹர் உணவை முடித்தவுடன் நபி ﷺ தொழுகைக்கு தயாராகி, தொழ வைத்தார்கள். அவர்கள் இருவரும் சஹர் உணவு முடித்ததற்கும் தொழுகையை ஆரம்பித்ததற்கும் எவ்வளவு நேரம் இருந்தது என்று நாங்கள் கேட்டோம். அனஸ் ﵁ கூறினார்கள்: ஒருவர் ஐம்பது வசனங்களை ஓதுகின்ற அளவு நேரம் இருந்தது.[40]

**3). فطر - ஃபித்ர் நோன்பு திறப்பதை உரிய நேரத்தில் உடனே தாமதப்படுத்தாமல் துரிதமாக செய்ய வேண்டும்.**

---

39. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல்; புகாரி, எண்: 541.
40. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 542

عَنْ سَهْلِ بْنِ سَعْدٍ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ لَا يَزَالُ النَّاسُ بِخَيْرٍ مَا عَجَّلُوا الْفِطْرَ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٨٣٨.

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: மக்கள் நோன்பு திறப்பதை தீவிரப்படுத்துகின்ற வரை நன்மையில் இருப்பார்கள்.[41]

**4). நோன்பு திறக்கும்போது, رطب - ருத்தப் கனிந்த மென்மையான பேரீச்சம் பழங்களை வைத்து நோன்பு திறப்பது முஸ்தஹப் -விரும்பத்தக்கது ஆகும்.** அது கிடைக்கவில்லை என்றால் நன்கு உலர்ந்த பேரீச்சம் பழங்களை வைத்து நோன்பு திறப்பது முஸ்தஹப் ஆகும். மேலும் இவற்றை ஒற்றைப்படையில் உண்பது முஸ்தஹப் ஆகும். அதாவது, ஒன்று அல்லது மூன்று அல்லது ஐந்து என்ற அடிப்படையில் பேரீச்சம் பழங்களை சாப்பிடுவது சிறப்பாகும். பேரீச்சம் பழங்கள் கிடைக்கவில்லை என்றால் சில மிடறு தண்ணீரைக் கொண்டு நோன்பு திறப்பது முஸ்தஹப் ஆகும்.

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﵁ قَالَ كَانَ النَّبِيُّ ﷺ يُفْطِرُ قَبْلَ أَنْ يُصَلِّيَ عَلَى رُطَبَاتٍ فَإِنْ لَمْ تَكُنْ رُطَبَاتٌ فَتُمَيْرَاتٌ فَإِنْ لَمْ تَكُنْ تُمَيْرَاتٌ حَسَا حَسَوَاتٍ مِنْ مَاءٍ رَوَاهُ التِّرْمِذِيُّ بِرَقْمِ ٦٣٢

நபி ﷺ அவர்கள் தொழுவதற்கு முன்பாக கனிந்த, ஈரமான சில பேரீச்சம் பழங்களைக் கொண்டு நோன்பு திறப்பார்கள். கனிந்த பழங்கள் இல்லையென்றால், முற்றிலும் பழுத்துவிட்ட பேரீச்சம் பழங்கள். அதுவும் இல்லையென்றால் சில மிடறு தண்ணீர் அள்ளிக்குடிப்பார்கள்.[42]

இவற்றில் எதுவும் கிடைக்கவில்லை என்றால், “நோன்பு திறக்கிறேன்” என்று உள்ளத்தில் நிய்யத் -எண்ணுவது போதுமானதாகும்.

**5). நோன்பிருக்கும் போதும் நோன்பு திறக்கும்போதும் துஆக்கள் கேட்பது முஸ்தஹப் ஆகும்.**

41. அறிவிப்பாளர்: சஹ்ல் இப்னு சஃது ﵁, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 1838
42. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல்: ஜாமிவுத் திர்மிதி, எண் 632

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﷛ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ ثَلَاثَةٌ لَا تُرَدُّ دَعْوَتُهُمْ الْإِمَامُ الْعَادِلُ وَالصَّائِمُ حَتّٰى يُفْطِرَ وَدَعْوَةُ الْمَظْلُومِ يَرْفَعُهَا اللهُ دُونَ الْغَمَامِ يَوْمَ الْقِيَامَةِ وَتُفْتَحُ لَهَا أَبْوَابُ السَّمَاءِ وَيَقُولُ بِعِزَّتِي لَأَنْصُرَنَّكِ وَلَوْ بَعْدَ حِينٍ رَوَاهُ ابْنُ مَاجَةَ بِرَقْمِ ١٧٤٢**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: மூன்று நபர்களின் துஆ மறுக்கப்படாது. நீதமான மன்னர்; நோன்பாளி, நோன்பு திறக்கின்றவரை; அநீதி இழைக்கப்பட்டவரின் துஆ. அல்லாஹ் அதை மேகத்திற்கு அருகில் உயர்த்துகின்றான். அந்த துஆவிற்காக வானத்தின் வாசல்கள் திறக்கப்படுகின்றன. என் கண்ணியத்தின் மீது ஆணையாக, கொஞ்சம் காலம் கழித்தாவது நிச்சயமாக நான் உனக்கு உதவி செய்வேன் என்று அல்லாஹ் கூறுகின்றான்.[43]

**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﷛ قَالَ قَالَ رَسُوْلُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ ثَلَاثُ دَعْوَاتٍ لَا تُرَدُّ دَعْوَةُ الْوَالِدِ وَدَعْوَةُ الصَّائِمِ وَدَعْوَةُ الْـمُسَافِرِ رَوَاهُ الْبَيْهَقِيُّ فِي السُّنَنِ الْكُبْرَى**

மூன்று (நபர்களுடைய) துஆக்கள் மறுக்கப்படாது. 1). தந்தையின் துஆ 2). நோன்பாளியின் துஆ 3). பயணியின் துஆ என்று ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்.[44]

**6). தர்மம் செய்வது, குர்ஆன் ஓதுவது, நோன்பாளிகளுக்கு நோன்பு திறக்க ஏற்பாடு செய்வது, இன்னும் பல உபரியான நல்லமல்களை அதிகம் செய்வது முஸ்தஹப் ஆகும்.**

**عَنِ ابْنِ عَبَّاسٍ ﷠ قَالَ كَانَ النَّبِيُّ ﷺ أَجْوَدَ النَّاسِ بِالْخَيْرِ وَأَجْوَدُ مَا يَكُونُ**

---

43. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷛, நூல்: சுனன் இப்னு மாஜா, எண்: 1742.
44. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﷛, நூல்: சுனன் குப்ரா - பைஹக்கி 3/345. இந்த ஹதீஸை ஷைக் அல்பானி ؒ அவர்கள் ஸஹீஹ் என்று தங்கள் ஸஹீஹா நூலில் கூறுகிறார்கள். எண்: 1797.

فِي شَهْرِ رَمَضَانَ لِأَنَّ جِبْرِيلَ كَانَ يَلْقَاهُ فِي كُلِّ لَيْلَةٍ فِي شَهْرِ رَمَضَانَ حَتَّى يَنْسَلِخَ يَعْرِضُ عَلَيْهِ رَسُولُ اللهِ ﷺ الْقُرْآنَ فَإِذَا لَقِيَهُ جِبْرِيلُ كَانَ أَجْوَدَ بِالْخَيْرِ مِنْ الرِّيحِ الْمُرْسَلَةِ رواه البخاري برقم ٤٦١٣

நபி ﷺ அவர்கள் மக்களில் செல்வத்தை அதிகம் தர்மம் செய்பவர்களாக இருந்தார்கள். ரமழான் மாதத்தில் அதிகம் தர்மம் செய்வார்கள். ஏனெனில், ரமழான் மாதத்தில் ஒவ்வோர் இரவிலும் நபி ﷺ அவர்களை ஜிப்ரீல் அவர்கள் சந்திப்பார்கள். அவர்களுடன் குர்ஆனை ஓதுவார்கள். ரஸூலுல்லாஹ் அவர்கள் தம்மை ஜிப்ரீல் சந்திக்கும்போது விரைவான காற்றை விட (வேகமாக) செல்வத்தை அதிகம் தர்மம் செய்பவர்களாக இருந்தார்கள்.[45]

**7). இரவு வணக்கத்தில் அதிகம் கவனம் செலுத்தி, சிரத்தை எடுத்து தொழுவது முஸ்தஹப் ஆகும்.**



குறிப்பாக, இறுதி பத்துடைய இரவில் இரவு முழுவதும் இபாதத்தில் - வணக்க வழிபாட்டில் கழிக்க முயற்சிக்க வேண்டும்.

عَنْ عَائِشَةَ رَضِيَ اللهُ عَنْهَا قَالَتْ كَانَ النَّبِيُّ ﷺ إِذَا دَخَلَ الْعَشْرُ شَدَّ مِئْزَرَهُ وَأَحْيَا لَيْلَهُ وَأَيْقَظَ أَهْلَهُ رواه البخاري برقم ١٨٨٤

இறுதி பத்து நுழைந்துவிட்டால் நபி ﷺ அவர்கள் தனது கீழாடையை நன்கு கட்டிக்கொள்வார்கள். தனது இரவை உயிர்ப்பிப்பார்கள். தனது குடும்பத்தினர்களை எழுப்பி விடுவார்கள்.[46]

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ مَنْ قَامَ رَمَضَانَ إِيمَانًا وَاحْتِسَابًا غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٣٦

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: யார் ரமழானில் (இரவு காலங்களில்)

45. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 4613
46. அறிவிப்பாளர்: ஆயிஷா رضي الله عنها, நூல்: புகாரி, எண்: 1884

இறை நம்பிக்கையுடனும் நன்மையை ஆதரவு வைப்பதுடனும் நின்று வணங்குவாரோ அவரின் முந்திய பாவங்கள் எல்லாம் மன்னிக்கப்பட்டு விடும்.[47]

**وَعَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ كَانَ رَسُولُ اللهِ ﷺ يُرَغِّبُ فِي قِيَامِ رَمَضَانَ مِنْ غَيْرِ أَنْ يَأْمُرَهُمْ فِيهِ بِعَزِيمَةٍ فَيَقُولُ مَنْ قَامَ رَمَضَانَ إِيمَانًا وَاحْتِسَابًا غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ فَتُوُفِّيَ رَسُولُ اللهِ ﷺ وَالْأَمْرُ عَلَى ذٰلِكَ ثُمَّ كَانَ الْأَمْرُ عَلَى ذٰلِكَ فِي خِلَافَةِ أَبِي بَكْرٍ وَصَدْرًا مِنْ خِلَافَةِ عُمَرَ عَلَى ذٰلِكَ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٢٦٧**

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் ரமழானின் இரவு வணக்கத்திற்கு ஆர்வமூட்டுவார்கள். ஆனால், கட்டளையாக ஏவ மாட்டார்கள். நபி ﷺ கூறுவார்கள்: யார் ரமழானில் இறைநம்பிக்கையுடனும், நன்மையின் ஆதரவுடனும் நின்று வணங்குவாரோ அவரின் முந்திய பாவங்கள் அவருக்கு மன்னிக்கப்படும். இதே நிலையில் இந்த காரியம் (-இரவுத் தொழுகை) இருக்கின்றபோதுதான் ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் இறந்து விட்டார்கள். பிறகு, அபூபக்ரின் ஆட்சி காலத்திலும் உமரின் ஆட்சி காலத்தின் ஆரம்பத்திலும் இப்படித்தான் இருந்தது.[48]

**8). ரமழான் மாதத்தில் மக்காவிற்கு சென்று உம்ரா செய்வது முஸ்தஹப் ஆகும்.**

**عَنِ ابْنِ عَبَّاسٍ ﵄ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لِامْرَأَةٍ مِن الْأَنْصَارِ مَا مَنَعَكِ أَنْ تَحُجِّينَ مَعَنَا قَالَتْ كَانَ لَنَا نَاضِحٌ فَرَكِبَهُ أَبُو فُلَانٍ وَابْنُهُ لِزَوْجِهَا وَابْنِهَا وَتَرَكَ نَاضِحًا نَنْضَحُ عَلَيْهِ قَالَ فَإِذَا كَانَ رَمَضَانُ اعْتَمِرِي فِيهِ فَإِنَّ عُمْرَةً فِي رَمَضَانَ حَجَّةٌ رواه البخاري برقم ١٦٥٧**

நபி ﷺ அவர்கள் அன்சாரி பெண் ஒருவரிடம் கூறினார்கள்:

47. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 36

48. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 1267

“எங்களுடன் நீங்களும் ஹஜ் செய்யாமல் போனது ஏன்?” அதற்கு அப்பெண் கூறினார்: “எங்களிடம் நீர்பாசனம் செவதற்கு ஓர் ஒட்டகம் இருந்தது. எனது கணவரும் அவருடைய மகனும் எனது மகனும் (உங்களுடன் ஹஜ் செய்வதற்காக) அந்த ஒட்டகத்தை வாகனமாக பயன்படுத்திக் கொண்டனர். நீர்பாசனம் செய்கின்ற இன்னோர் ஒட்டகம் இருந்தது. அதை எங்களுக்காக நாங்கள் நீர்பாசனம் செய்வதற்கு எனது கணவர் விட்டுவிட்டு சென்றுவிட்டார்.” நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “ரமழான் மாதம் வந்துவிட்டால் நீங்கள் அதில் ஓர் உம்ரா செய்யுங்கள்! ரமழானில் உம்ரா செய்வது ஹஜ்ஜுக்கு சமமாகும்.[49]

இமாம் புகாரி அவர்களின் மற்றோர் அறிவிப்பில்,

فَإِنَّ عُمْرَةً فِي رَمَضَانَ تَقْضِي حَجَّةً أَوْ حَجَّةً مَعِي

நிச்சயமாக ரமழானில் உம்ரா செய்வது ஹஜ்ஜு செய்வதற்கு ஈடாக இருக்கின்றது அல்லது என்னுடன் ஹஜ்ஜு செய்வதற்கு ஈடாக இருக்கின்றது என்று நபி அவர்கள் கூறியதாக வந்துள்ளது.[50]



عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ الصِّيَامُ جُنَّةٌ فَلَا يَرْفُثْ وَلَا يَجْهَلْ وَإِنْ امْرُؤٌ قَاتَلَهُ أَوْ شَاتَمَهُ فَلْيَقُلْ إِنِّي صَائِمٌ مَرَّتَيْنِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٧٦١

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நோன்பு ஒரு கேடயமாகும்; எனவே, நோன்பாளி கெட்ட பேச்சுகளைப் பேசவேண்டாம்! முட்டாள் தனமான செயல்களில் ஈடுபட வேண்டாம்! யாரேனும் அவருடன் சண்டைக்கு வந்தால் அல்லது அவரை ஏசினால் ‘நான் நோன்பாளி’ என்று இருமுறை கூறட்டும்.[51]

عن أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ قَالَ اللهُ كُلُّ عَمَلِ ابْنِ آدَمَ لَهُ إِلَّا الصِّيَامَ فَإِنَّهُ لِي وَأَنَا أَجْزِي بِهِ وَالصِّيَامُ جُنَّةٌ وَإِذَا كَانَ يَوْمُ صَوْمِ أَحَدِكُمْ

49. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﷺ, நூல்: புகாரி, எண்: 1657
50. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﷺ, எண்: 1730
51. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 1761

فَلَا يَرْفُثْ وَلَا يَصْخَبْ فَإِنْ سَابَّهُ أَحَدٌ أَوْ قَاتَلَهُ فَلْيَقُلْ إِنِّي امْرُؤٌ صَائِمٌ رواه البخاري برقم ١٧٧١

அல்லாஹ் கூறுவதாக ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: ஆதமுடைய மகனின் செயல்கள் எல்லாம் அவனுக்கு உரியன. ஆனால், நோன்பைத் தவிர. நிச்சயமாக அது எனக்கு உரியது. நான் அதற்கு கூலி வழங்குவேன். நோன்பு ஒரு கேடயமாகும். உங்களில் ஒருவரின் நோன்புடைய நாளாக இருந்தால் அன்றைய நாளில் அவர் இச்சையுடன் பேசவேண்டாம், கத்திப் பேசவேண்டாம் (-கூச்சல் போட வேண்டாம்.) அவரை யாராவது ஏசினால் அல்லது அவரிடம் யாரும் சண்டையிட்டால் நிச்சயமாக நான் நோன்பாளி என்று அவர் கூறட்டும்.[52]

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## நோன்பில் வெறுக்கப்பட்ட காரியங்கள்

ஒருவர் நோன்பிருக்கும் போது அவர் பின்வருகின்ற காரியங்களை செய்வது மக்ரூஹ் -வெறுக்கப்பட்டதாக இருக்கும். அதனால் அவருடைய நோன்பின் நற்கூலி குறைந்துவிடும். சில நேரம் இதனால் நோன்பு முறிகின்ற நிலையும் உருவாகலாம்.

**1).** உளூவில் வாய்கொப்பளிக்கும்போதும் மூக்கில் தண்ணீர் செலுத்தி சுத்தம் செய்யும்போதும் கவனமாக செய்ய வேண்டும். அப்படி இல்லாமல் **அதிகமாக அண்ணார்ந்து வாய்கொப்பளிப்பதும் மூக்கில் தண்ணீரை உறிஞ்சி சுத்தம் செய்வதும் மக்ரூஹ் -வெறுக்கப்பட்டதாகும்.** இதனால் தண்ணீர் குடலுக்குள் செல்ல வாய்ப்புள்ளது.

عَنْ لَقِيطِ بْنِ صَبِرَةَ رضي الله عنه قَالَ قُلْتُ يَا رَسُولَ اللهِ أَخْبِرْنِي عَنِ الْوُضُوءِ قَالَ أَسْبِغْ الْوُضُوءَ وَخَلِّلْ بَيْنَ الْأَصَابِعِ وَبَالِغْ فِي الِاسْتِنْشَاقِ إِلَّا أَنْ تَكُونَ صَائِمًا رواه الترمذي برقم ٧١٨

52. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 1771

லக்கீத் இப்னு ஸபீரா ﵁ கூறுகிறார்: நான் கூறினேன், அல்லாஹ்வின் தூதரே! எனக்கு உளூவைப் பற்றி அறிவியுங்கள்! ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: “உளூவை பூரணமாக செய்! விரல்களை கோதி கழுவு! மூக்கில் நன்கு தண்ணீர் செலுத்தி கழுவு! ஆனால், நீ நோன்பாளியாக இருந்தால் அவ்வாறு செய்யாதே![53]

**2). அதிக உணர்ச்சி ஏற்படுகின்றவர், உணர்ச்சிகளை அடக்க முடியாதவர் தனது மனைவிக்கு முத்தம் கொடுப்பது, அல்லது மனைவியுடன் விளையாடுவது வெறுக்கப்பட்டதாகும்.**

இவ்வாறு செய்யும்போது அவரது உணர்ச்சிகள் தூண்டடப்படலாம். அது அவரை உடலுறவுக்கு அல்லது விந்து வெளியேறுகின்ற நிலைக்கு தள்ளிவிடலாம்.

யார் ஒருவர் தனது உணர்ச்சிகளை அடக்குவதற்கு வலிமை பெற்றுள்ளாரோ அவருக்கு இந்த செயல் வெறுக்கப்பட்டதல்ல.

பாடம் 3

**عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ كَانَ النَّبِيُّ ﷺ يُقَبِّلُ وَيُبَاشِرُ وَهُوَ صَائِمٌ وَكَانَ أَمْلَكَكُمْ لِإِرْبِهِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٧٩٢**

நபி ﷺ அவர்கள் நோன்பு நோற்ற நிலையில் (தம் மனைவியரை) முத்தமிடுவார்கள், கட்டியணைப்பார்கள். உங்களில் தமது ஆசையை அதிகம் கட்டுப்படுத்துபவர்களாக அவர்கள் இருந்தார்கள்![54]

மேலும், இச்சையை தூண்டி விந்து வெளியேறும்படி செய்கின்ற செயல்களையும் அல்லது உடலுறவுக்கு கொண்டு சென்றுவிடுகின்ற செயல்களையும் கண்டிப்பாக தவிர்க்க வேண்டும். உதாரணமாக, மனைவியை இச்சையுடன் பார்த்துக்கொண்டிருப்பது, அல்லது உடலுறவைப் பற்றி அதிகம் சிந்திப்பது போன்ற செயல்களை தவிர்க்க வேண்டும்.

---

53. நூல்: திர்மிதி, எண்: 718

54. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: ஸஹீஹுல் புகாரி, எண்: 1792.

**3). சளியை முழுங்குவது வெறுக்கப்பட்ட செயலாகும்.**

இவ்வாறு முழுங்குவது அதை குடலுக்குள் சேர்த்துவிடும். அத்துடன் இது ஒரு அருவருக்கத்தக்க செயலாகவும் கெடுதியை ஏற்படுத்துகின்ற செயலாகவும் இருக்கின்றது.

**4). அவசியமில்லாமல் உணவை சுவைத்துப் பார்ப்பது வெறுக்கப்பட்ட செயலாகும்.**

சமையல்காரராக இருப்பவருக்கு அவசியம் ஏற்பட்டால், மிக சிறிதளவு சுவைத்துப் பார்ப்பது கூடும். ஆனால், தான் சுவைக்கின்ற பொருள் தொண்டை வரை சென்றுவிடாமல் மிக கவனமாக இருக்கவேண்டும். பிறகு, உடனே வாயை சுத்தப்படுத்திவிட வேண்டும்.

------------------------

*நான்காவது பாடம்*

# கழா - விடுபட்ட நோன்புகளை நோற்பது, விரும்பத்தக்க நோன்புகள், வைக்கக்கூடாத நோன்புகள், இன்னும் வெறுக்கப்பட்ட நோன்புகள்

இந்த பாடத்தில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன.

**முதலாவது சட்டவிளக்கம்**

## கழா - விடுபட்ட நோன்புகளை நோற்பது

ஒருவர் ரமழான் மாதத்தில் தகுந்த காரணம் இல்லாமல் ஒரு நோன்பையோ அல்லது சில நோன்புகளையோ விட்டுவிட்டால் அவர் அதற்காக மனம் வருந்தி அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு கோரவேண்டும். ஏனெனில், அவர் செய்த இந்த செயல் ஒரு பெரிய பாவமாகும். மேலும், தான் தவறவிட்ட அந்த நோன்பையும் ரமழான் மாதம் முடிந்தவுடன் அவர் நோற்க வேண்டும். விடுபட்ட நோன்புகளை அவர் உடனடியாக கழா செய்ய வேண்டும் என்பதுதான் அறிஞர்களுடைய கூற்றுகளில் சரியான கூற்றாகும். அவர் ரமழானுடைய நோன்பை வீணடிக்காமல் இருந்திருக்க வேண்டும். தனக்கு எவ்வித சலுகை இல்லாமல் இருந்தும் வேண்டுமென்றே அவர் நோன்பை தவற விட்டிருக்கின்றார். ஆகவே, அவர் அதற்காக பாவமன்னிப்பு கேட்பதுடன், தான் வைக்காமல் விட்ட நோன்பை உடனடியாக வைப்பதுதான் சரியாகும்.

ஒருவர் தகுந்த காரணத்தினால் ரமழானுடைய நோன்பை தவற விட்டிருந்தால், அவர் ரமழான் மாதம் முடிந்தவுடன், இன்னும் அந்த காரணம் நீங்கியவுடன் விடுபட்ட நோன்பை முடிந்தளவு சீக்கிரமாக கழா செய்ய வேண்டும். உதாரணமாக, பெண்கள் 'ஹைழ்', அல்லது 'நிஃபாஸ்' காரணமாக நோன்பை விட்டிருந்தால், அல்லது ஒருவர் பயணம், நோய் போன்ற தகுந்த காரணத்தால் நோன்பை விட்டிருந்தால் ரமழான் முடிந்தவுடன், இன்னும் அந்த காரணம் முடிந்த பின்னர் விடுபட்ட நோன்புகளை கழா செய்ய வேண்டும்.

உடனடியாக கழா செய்வது என்பது இவர்கள் விஷயத்தில் முஸ்தஹப் ஆகும். வாஜிப் - கட்டாயம் இல்லை. ஆனால், அடுத்த ரமழான் வருவதற்குள் கழா செய்துவிட வேண்டும். விரைந்து கழா செய்வதால் தனது பொறுப்பில் உள்ள கடமையை தீவிரமாக நிறைவேற்றிய நன்மையை இவர் அடைவார். மேலும், விரைந்து கழா செய்வது பேணுதலான ஒரு விஷயமுமாகும். ஏனெனில், நோய், பயணம் போன்ற தகுந்த காரணங்கள் அவருக்கு மீண்டும் ஏற்படலாம்.

ஆகுமான காரணங்களால் அடுத்த ரமழான் வருவதற்குள் நோன்பை கழா செய்ய முடியாமல் ஆகிவிட்டால் அந்த இரண்டாவது ரமழான் முடிந்தவுடன் அவர் பழைய நோன்புகளை கழா செய்ய வேண்டும்.

இரண்டாவது ரமழான் வருவதற்குள் விடுபட்ட நோன்புகளை கழா செய்யவில்லை என்றால் அவர் தான் விட்ட நோன்புகளை கழா செய்வதுடன் ஒவ்வொரு நோன்புக்காக ஓர் ஏழைக்கு உணவளிக்கவும் வேண்டும்.

ஒருவர் ரமழான் நோன்புகளை கழாவாக நிறைவேற்றும்போது அவற்றை தொடர்ச்சியாகத்தான் வைக்க வேண்டும் என்று அவசியம் இல்லை. அவர் தனது வசதிக்கு ஏற்ப வைக்கலாம். ஒன்றன் பின் ஒன்றாக தொடர்ச்சியாகவும் வைக்கலாம். அல்லது பிரித்தும் வைக்கலாம்.

அல்லாஹ் கூறுகின்றான்:

فَمَنْ كَانَ مِنْكُمْ مَرِيضًا أَوْ عَلَى سَفَرٍ فَعِدَّةٌ مِنْ أَيَّامٍ أُخَرَ

யார் உங்களில் நோயாளியாக இருப்பாரோ அல்லது பயணத்தில் இருப்பாரோ அவர் தான் விட்ட நோன்புகளை வேறு நாள்களில் கணக்கிட்டு (நோன்பு வைத்துக்) கொள்ளவும். (அல்குர்ஆன் 2:184)

**கருத்து:** விடுபட்ட நோன்புகளை வேறு நாள்களில் கழா செய்ய வேண்டும் என்றுதான் இந்த வசனத்தில் அல்லாஹ் கூறுகின்றான். அவற்றை தொடர்ச்சியாக கழா செய்ய வேண்டும் என்று அல்லாஹ் கூறவில்லை. தொடர்ச்சியாகத்தான் வைக்க வேண்டும் என்று இருந்தால் அல்லாஹ் அதை இந்த இடத்தில் கண்டிப்பாக விவரித்து கூறியிருப்பான்.

**இரண்டாது சட்டவிளக்கம்**

## முஸ்தஹப் – விரும்பத்தக்க நோன்புகள்

கடமையான நோன்புகளைப் போன்று நஃபில் - உபரியான பல நோன்புகளையும் அல்லாஹ் தனது அடியார்களுக்கு வழங்கியிருக்கின்றான். இது அல்லாஹ்வின் ஞானமும் அவனது அருளுமாகும். இந்த உபரியான நோன்புகளின் மூலம் அடியானுக்கு அதிக நன்மைகள் கிடைப்பதுடன் அவனது ஃபர்ழான நோன்புகளில் உள்ள குறைகளும் நிவர்த்தி செய்யப்பட்டு விடுகின்றன. மறுமை நாளில் ஃபர்ழான வணக்க வழிபாட்டில் நிகழ்ந்த குறைகள் உபரியான வணக்க வழிபாடுகள் மூலமாக நிவர்த்தி செய்யப்படும் என்பதை முன்பு ஒரு பாடத்தில் நாம் கூறியிருக்கின்றோம்.

**உபரியான நோன்புகள்**

பின் குறிப்பிடப்படுன்ற நாள்களில் நோன்பு வைப்பது முஸ்தஹப் - விரும்பத்தக்க செயலாகும்.

**1). ஷவ்வால் மாதம் ஆறு நாள்கள் நோன்பு வைப்பது முஸ்தஹப் ஆகும்.**

عَنْ أَبِي أَيُّوبَ الْأَنْصَارِيِّ ﷺ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ مَنْ صَامَ رَمَضَانَ ثُمَّ أَتْبَعَهُ سِتًّا مِنْ شَوَّالٍ كَانَ كَصِيَامِ الدَّهْرِ رواه مسلم برقم ٦٩٠

நிச்சயமாக ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் ரமழானில் நோன்பு வைத்து, பிறகு, அதைத் தொடர்ந்து ஷவ்வால் மாதத்தில் ஆறு நோன்புகளை வைப்பாரோ அவர் காலமெல்லாம் நோன்பு வைத்ததைப் போன்றாகும்.[55]

**2). அரஃபா தினத்தில் ஹாஜி அல்லாத மற்றவர்கள் நோன்பு வைப்பது முஸ்தஹப் ஆகும்.**

55. அறிவிப்பாளர்: அபூ அய்யூப் அல் அன்ஸாரி ﷺ, நூல்: முஸ்லிம், எண்: 690

صِيَامُ يَوْمِ عَرَفَةَ أَحْتَسِبُ عَلَى اللهِ أَنْ يُكَفِّرَ السَّنَةَ الَّتِي قَبْلَهُ وَالسَّنَةَ الَّتِي بَعْدَهُ

அரஃபா தினத்தில் நோன்பு நோற்பது அதற்கு முன்னுள்ள ஆண்டுக்கும் அதற்கு பின்னுள்ள ஆண்டுக்கும் பரிகாரமாக ஆகிவிடும் என்று நான் அல்லாஹ்விடம் நன்மையை ஆதரவு வைக்கின்றேன் என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[56]

ஹஜ் வணக்கத்தை நிறைவேற்றுவதற்காக அரஃபாவில் தங்கி இருப்பவர்கள் இந்த நோன்பை வைக்க மாட்டார்கள். இது அவர்களுக்கு சுன்னா அல்ல. நபி ﷺ அவர்கள் ஹஜ் செய்தபோது அரஃபா தினத்தில் அவர்கள் நோன்பு வைத்திருக்கவில்லை. மக்கள் பார்க்கும்படியாக நபி அவர்கள் அரஃபா தினம் அன்று பால் அருந்தினார்கள். அரஃபா தினத்தில் ஹாஜி நோன்பு வைக்காமல் இருப்பதுதான் அவருக்கு நல்லதாகும். உடல் சோர்வடையாமல் வழிபாடுகளை உற்சாகத்துடன் செய்வதும் துஆ அதிகம் கேட்பதும் ஹாஜி அன்றைய தினம் நோன்பு இல்லாமல் இருந்தால்தான் அவருக்கு சாத்தியமாகும்.

**3). ஆஷூரா நோன்பு - அதாவது முஹர்ரம் மாதம் பிறை பத்து அன்று நோன்பு வைப்பது முஸ்தஹப் ஆகும்.**

وَصِيَامُ يَوْمِ عَاشُورَاءَ أَحْتَسِبُ عَلَى اللهِ أَنْ يُكَفِّرَ السَّنَةَ الَّتِي قَبْلَهُ

ஆஷூரா - முஹர்ரம் மாதத்தின் பத்தாம் நாளன்று நோன்பு வைப்பது அதற்கு முன்னுள்ள வருடத்திற்கு பரிகாரமாக ஆகும் என நான் அல்லாஹ்விடம் நன்மையை ஆதரவு வைக்கின்றேன் என்று நபி ﵁ அவர்கள் கூறினார்கள்.[57]

ஆஷூரா நோன்புடன் சேர்த்து அதற்கு முந்திய ஒன்பதாம் நாளன்று நோன்பு வைப்பது முஸ்தஹப் ஆகும். அல்லது ஆஷூராவுடன் அதற்கு அடுத்த பதினொன்றாம் நாளில் நோன்பு வைப்பது முஸ்தஹப் ஆகும்.

56. அறிவிப்பாளர்: அபூ கதாதா ﵁, நூல்: முஸ்லிம், எண்: 1976
57. அறிவிப்பாளர்: அபூ கதாதா ﵁, நூல்: முஸ்லிம், எண்: 1976

**عَنْ عَبْدِ اللهِ بْنِ عَبَّاسٍ ﵄ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَئِنْ بَقِيتُ إِلَى قَابِلٍ لَأَصُومَنَّ التَّاسِعَ رواه مسلم برقم ١٩١٧**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: அடுத்த ஆண்டு நான் உயிருடன் இருந்தால் நிச்சயமாக ஒன்பதாம் நாளன்றும் நோன்பு நோற்பேன்.[58]

மேலும் நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

ஆஷூராவிற்கு முன்னால் ஒரு நாள் அல்லது அதற்கு பின்னால் ஒரு நாள் நோன்பு வையுங்கள்! யூதர்களுக்கு மாறுசெய்யுங்கள்!

இந்த ஹதீஸை இமாம் அஹ்மது ﵀ மற்றும் இமாம் இப்னு குஸைமா ﵀ பதிவு செய்துள்ளார்கள். எனினும், இதை ஹதீஸ் மர்ஃபூஃ (நபி அவர்கள் கூறியது) என்று வருகின்ற அறிவிப்பு பலவீனமாக உள்ளது. ஆனால், ஹதீஸ் மவ்கூஃப் (இப்னு அப்பாஸ் ﵄ கூறியது) என்று வருகின்ற அறிவிப்பு பலமானதாக உள்ளது.

**4). ஒவ்வொரு வாரமும் திங்கள் மற்றும் வியாழன் அன்று நோன்பு வைப்பது முஸ்தஹப் ஆகும்.**

**عَنْ رَبِيعَةَ بْنِ الْغَازِ ﵀ أَنَّهُ سَأَلَ عَائِشَةَ ﵂ عَنْ صِيَامِ رَسُولِ اللهِ ﷺ فَقَالَتْ كَانَ يَتَحَرَّى صِيَامَ الِاثْنَيْنِ وَالْخَمِيسِ رواه ابن ماجة برقم ١٧٢٩**

ரபீஆ இப்னு அல்காஸ் ﵀ அவர்கள் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடைய நோன்பைப் பற்றி ஆயிஷா ﵂ அவர்களிடம் கேட்டார். அதற்கு ஆயிஷா ﵂ அவர்கள் கூறினார்கள்: நபி ﷺ அவர்கள் திங்கள் அன்றும் வியாழன் அன்றும் நோன்பு வைப்பதில் மிகுந்த கவனம் செலுத்துபவர்களாக இருந்தார்கள்.[59]

58. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: முஸ்லிம், எண்; 1917
59. நூல்: இப்னு மாஜா, எண்: 1729

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ تُعْرَضُ الْأَعْمَالُ يَوْمَ الِاثْنَيْنِ وَالْخَمِيسِ فَأُحِبُّ أَنْ يُعْرَضَ عَمَلِي وَأَنَا صَائِمٌ رواه الترمذي برقم ٦٧٨

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: திங்கள் அன்றும் வியாழன் அன்றும் அமல்கள் சமர்ப்பிக்கப்படுகின்றன. நான் நோன்பாளியாக இருக்கின்றபோது எனது அமல்கள் சமர்ப்பிக்கப்பட வேண்டும் என்று நான் ஆசைப்படுகின்றேன்.[60]

**5). ஒவ்வொரு மாதமும் மூன்று நாள்கள் நோன்பு வைப்பது முஸ்தஹப் ஆகும்.**

நபி ﷺ அவர்கள் அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னு ஆஸ் ؓ அவர்களுக்கு கூறினார்கள்:

وَصُمْ مِنْ الشَّهْرِ ثَلَاثَةَ أَيَّامٍ فَإِنَّ الْحَسَنَةَ بِعَشْرِ أَمْثَالِهَا وَذٰلِكَ مِثْلُ صِيَامِ الدَّهْرِ

நீங்கள் மாதத்தில் மூன்று நாள்கள் நோன்பு வையுங்கள்! ஏனெனில், நன்மைகள் எல்லாம் அவற்றைப் போன்று பத்து நன்மைகளுக்கு சமமானதாகும். ஆகவே, இது வருடமெல்லாம் நோன்பு வைப்பது போன்றாகும்.[61]

عَنْ أَبِي هُرَيْرَةَ ؓ قَالَ أَوْصَانِي خَلِيلِي بِثَلَاثٍ لَا أَدَعُهُنَّ حَتّٰى أَمُوتَ صَوْمِ ثَلَاثَةِ أَيَّامٍ مِنْ كُلِّ شَهْرٍ وَصَلَاةِ الضُّحَى وَنَوْمٍ عَلَى وِتْرٍ رواه البخاري برقم ١١٠٧

அபூ ஹுரைரா ؓ அவர்கள் கூறினார்கள்: எனது உயிர்த் தோழர் அவர்கள் எனக்கு மூன்று காரியங்களை செய்யும்படி உபதேசம் செய்தார்கள். நான் மரணிக்கின்ற வரை அவற்றை விடமாட்டேன்.

1. ஒவ்வொரு மாதமும் மூன்று நாள்கள் நோன்பு வைப்பது

60. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: திர்மிதி, எண்: 678

61. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னு ஆஸ் ؓ, நூல்; புகாரி, எண்: 1840

2. ழுஹா தொழுவது

3. வித்ர் தொழுதுவிட்டு தூங்குவது.[62]

அந்த மூன்று நாள்கள்: பிறை பதிமூன்று, பதினான்கு, பதினைந்தாக இருப்பது முஸ்தஹப் ஆகும். இந்த மூன்று நாள்களுக்கும் அல்அய்யாமுல் பீழ் - வெண்மையான நாள்கள் என்று கூறப்படும்.

عَنْ أَبِي ذَرٍّ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ كَانَ مِنْكُمْ صَائِمًا مِنَ الشَّهْرِ ثَلَاثَةَ أَيَّامٍ فَلْيَصُمْ الثَّلَاثَ الْبِيضَ رواه أحمد برقم ٢٠٣٨٨

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களில் யார் மாதத்தில் மூன்று நாள்கள் நோன்பாளியாக இருப்பாரோ அவர் வெண்மையான மூன்று நாள்களில் நோன்பு வைக்கட்டும்.[63]

**6). வாழ்நாளெல்லாம் ஒரு நாள் நோன்பு வைப்பதும் ஒரு நாள் நோன்பில்லாமல் இருப்பதும் முஸ்தஹப் ஆகும்.**

நபி ﷺ அவர்கள் அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னு ஆஸ் رضي الله عنه அவர்களுக்கு கூறினார்கள்:

قَالَ فَصُمْ يَوْمًا وَأَفْطِرْ يَوْمًا فَذٰلِكَ صِيَامُ دَاوُدَ عَلَيْهِ السَّلَام وَهُوَ أَفْضَلُ الصِّيَامِ

நீங்கள் ஒரு நாள் நோன்பு வையுங்கள்! ஒரு நாள் நோன்பை விட்டு விடுங்கள்! இதுதான் தாவூத் عليه السلام அவர்களுடைய நோன்பாகும். இதுதான் நோன்பில் மிகச் சிறந்ததாகும்.[64]

இந்த வகை நோன்பு உபரியான நோன்புகளில் மிக சிறப்பானதாகும்.

**7). அல்லாஹ்வுடைய மாதமாகிய முஹர்ரமில் அதிகம் நோன்பு வைப்பது முஸ்தஹப் ஆகும்.**



62. நூல்: புகாரி, எண்: 1107

63. அறிவிப்பாளர்: அபூ தர் رضي الله عنه, நூல்: அஹமது, எண்: 20388

64. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னு ஆஸ் رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 1840.

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ أَفْضَلُ الصِّيَامِ بَعْدَ رَمَضَانَ شَهْرُ اللهِ الْمُحَرَّمُ وَأَفْضَلُ الصَّلَاةِ بَعْدَ الْفَرِيضَةِ صَلَاةُ اللَّيْلِ رواه مسلم برقم ١٩٨٢

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: ரமழானுடைய நோன்புக்கு பிறகு நோன்புகளில் மிக சிறப்பானது அல்லாஹ்வுடைய மாதமாகிய முஹர்ரம் ஆகும். ஃபர்ழான தொழுகைக்கு பிறகு தொழுகையில் மிக சிறப்பானது இரவுத் தொழுகை ஆகும்.[65]

**8). துல்ஹஜ் மாதம் முதல் பிறையிலிருந்து ஒன்பது நாள்கள் வரை நோன்பு வைப்பது முஸ்தஹப் ஆகும்.**

இந்த நாள்களில் அதிகமாக நல்லமல்கள் செய்வது விரும்பத்தக்கதாகும். இந்த நாள்களில் பொதுவாக நல்லமல்களை செய்வதற்கு நபி ﷺ அவர்கள் அதிகம் ஆர்வமூட்டியுள்ளார்கள். நல்லமல்களில் நோன்பு மிக சிறப்பான ஒன்றாகும். ஆகவே, இந்த நாள்களில் நோன்பு வைப்பதை அறிஞர்கள் கடைப்பிடித்துள்ளார்கள்.

عَنِ ابْنِ عَبَّاسٍ ﷺ عَنِ النَّبِيِّ ﷺ أَنَّهُ قَالَ مَا الْعَمَلُ فِي أَيَّامٍ أَفْضَلَ مِنْهَا فِي هَذِهِ قَالُوا وَلَا الْجِهَادُ قَالَ وَلَا الْجِهَادُ إِلَّا رَجُلٌ خَرَجَ يُخَاطِرُ بِنَفْسِهِ وَمَالِهِ فَلَمْ يَرْجِعْ بِشَيْءٍ رواه البخاري برقم ٩١٦

மற்ற எந்த நாள்களிலும் அமல் செய்வது இந்த நாள்களில் (-துல் ஹஜ் பத்து நாள்களில்) அமல் செய்வதை விட மிகச் சிறந்ததல்ல என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். அதற்கு ஜிஹாதும் (சிறந்தது) இல்லையா? என்று நபித்தோழர்கள் கேட்டார்கள். நபி அவர்கள் கூறினார்கள்: ஜிஹாதும் சிறந்தது இல்லை. ஆனால், யார் ஒருவர் தனது உயிரையும் பொருளையும் ஆபத்தில் போடும்படியாக போருக்குப் புறப்பட்டார். பிறகு அவற்றில் எதனுடனும் (குடும்பத்தாரிடம்) திரும்ப வரவில்லையோ அந்த மனிதரின் ஜிஹாதைத் தவிர.[66]

65. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: முஸ்லிம், எண்: 1982
66. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﷺ, நூல்: புகாரி, எண்: 916

# மக்ரூஹ் – வெறுக்கப்பட்ட நோன்புகள் மற்றும் முஹர்ரம் – தடுக்கப்பட்ட நோன்புகள்

**1). ரஜப் மாதத்தில் மட்டும் விசேஷமாக நோன்பு வைப்பது வெறுக்கப்பட்ட செயலாகும்.**

இஸ்லாம் வருவதற்கு முன்பு அறியாமைக் காலத்தில் அரபுகள் இதை செய்து வந்தனர். அரபுகள் ரஜப் மாதத்தை அதிகம் மதித்து வந்தார்கள். ஒருவர் மற்ற மாதங்களிலும் நோன்பு வைக்கிறார். அவ்வாறே ரஜப் மாதத்திலும் நோன்பு வைக்கிறார் என்றால் அது தவறாக ஆகாது.

**عَنْ خَرَشَةَ بْنِ الْحُرِّ ﵁ قَالَ رَأَيْتُ عُمَرَ بْنَ الْخَطَّابِ يَضْرِبُ أَكُفَّ الرِّجَالِ فِي صَوْمِ رَجَبَ حَتَّى يَضَعُونَهَا فِي الطَّعَامِ وَيَقُولُ رَجَبُ وَمَا رَجَبُ؟ إِنَّمَا رَجَبُ شَهْرٌ كَانَ يُعَظِّمُهُ أَهْلُ الْجَاهِلِيَّةِ فَلَمَّا جَاءَ الْإِسْلَامُ تُرِكَ**

ரஜப் மாதத்தில் நோன்பு வைப்பவர்கள் நோன்பு முறித்து அவர்கள் உணவில் கை வைக்கின்ற வரை அவர்களின் கரங்களில் உமர் ﵁ அவர்கள் அடிப்பதை நான் பார்த்தேன். மேலும் உமர் ﵁ கூறுவார்கள்: ரஜப்! என்ன ரஜப்? (நீங்கள் சாப்பிடுங்கள்!) இது அறியாமைக் கால மக்கள் மதித்து வந்த மாதமாகும். இஸ்லாம் வந்தபின்னர் அது விடப்பட்டு விட்டது.[67]

**2). வெள்ளிக் கிழமையில் மட்டும் நோன்பு வைப்பது வெறுக்கப்பட்டதாகும்.**

வியாழன் மற்றும் வெள்ளி நோன்பு வைக்கலாம் அல்லது வெள்ளி, சனி நோன்பு வைக்கலாம்.

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَا تَصُومُوا يَوْمَ الْجُمُعَةِ إِلَّا وَقَبْلَهُ يَوْمٌ أَوْ بَعْدَهُ يَوْمٌ رواه أحمد برقم ١٠٠٢١**

67. அறிவிப்பாளர்: கர்ஷா இப்னு அல்ஹுர் ﵁, நூல்: அல்முஃஜமுல் அவ்ஸத் - தப்ரானி, எண்: 7636

பாடம் 4

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: வெள்ளிக்கிழமை (மட்டும்) நீங்கள் நோன்பு வைக்காதீர்கள், அதற்கு முன்னர் ஒரு நாள் அல்லது அதற்கு பின்னர் ஒரு நாள் (நோன்பு) இருந்தாலே தவிர.[68]

**عَنِ ابْنِ عَبَّاسٍ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَا تَصُومُوا يَوْمَ الْجُمُعَةِ وَحْدَهُ**

**رواه أحمد برقم ٢٤٨٤**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: வெள்ளிக்கிழமை மட்டும் நோன்பு வைக்காதீர்கள்.[69]

**3). அவ்வாறே, சனிக்கிழமை மட்டும் தனியாக நோன்பு வைப்பதும் வெறுக்கப்பட்டதாகும்.**

**عَنْ عَبْدِ اللهِ بْنِ بُسْرٍ رضي الله عنه عَنْ أُخْتِهِ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ لَا تَصُومُوا يَوْمَ السَّبْتِ إِلَّا فِيمَا افْتَرَضَ اللهُ عَلَيْكُمْ فَإِنْ لَمْ يَجِدْ أَحَدُكُمْ إِلَّا لِحَاءَ عِنَبَةٍ أَوْ عُودَ شَجَرَةٍ فَلْيَمْضُغْهُ قَالَ أَبُو عِيسَى هٰذَا حَدِيثٌ حَسَنٌ وَمَعْنَى كَرَاهَتِهِ فِي هٰذَا أَنْ يَخُصَّ الرَّجُلُ يَوْمَ السَّبْتِ بِصِيَامٍ لِأَنَّ الْيَهُودَ تُعَظِّمُ يَوْمَ السَّبْتِ**

அப்துல்லாஹ் இப்னு புஸ்ர் رضي الله عنه தனது சகோதரியிடமிருந்து ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறியதாக அறிவிக்கின்றார்: உங்கள் மீது அல்லாஹ் கடமையாக்கிய மாதத்தில் தவிர நீங்கள் சனிக்கிழமைகளில் நோன்பு வைக்காதீர்கள். உங்களில் ஒருவர் அன்று நோன்பு வைத்த பின்னர் திராட்சை கொடி அல்லது ஒரு மரக்குச்சியைத் தவிர வேறு எதையும் பெறவில்லை என்றாலும் அவர் அதை மென்று நோன்பை விட்டுவிடட்டும்.

இமாம் அபூ ஈஸா திர்மிதி رحمه الله கூறுகிறார்கள்: யூதர்கள் சனிக்கிழமையை மிகவும் மதித்து வந்ததால் அன்று மட்டும் விசேஷமாக நாம் நோன்பு வைப்பதை நபி ﷺ அவர்கள் வெறுத்தார்கள்.

---

68. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: அஹ்மது, எண்: 10021
69. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் رضي الله عنه, நூல்: அஹ்மது, எண்: 2484

சனிக்கிழமையுடன் ஞாயிற்றுக்கிழமையும் சேர்த்து நோன்பு வைக்கப்பட்டால் அல்லது வெள்ளி, சனி ஆகிய இரு நாள்கள் நோன்பு வைக்கப்பட்டால் குற்றமில்லை.

عَنْ جُوَيْرِيَةَ بِنْتِ الْحَارِثِ رضي الله عنها أَنَّ النَّبِيَّ ﷺ دَخَلَ عَلَيْهَا يَوْمَ الْجُمُعَةِ وَهِيَ صَائِمَةٌ فَقَالَ أَصُمْتِ أَمْسِ قَالَتْ لَا قَالَ تُرِيدِينَ أَنْ تَصُومِي غَدًا قَالَتْ لَا قَالَ فَأَفْطِرِي رواه البخاري برقم ١٨٥٠

ஜுவைரியா பின்த் அல்ஹாரிஸ் رضي الله عنها அவர்கள் வெள்ளிக்கிழமை நோன்பு வைத்திருந்தபோது அவர்களிடம் நபி ﷺ அவர்கள் வந்தார்கள். ஜுவைரியா رضي الله عنها அவர்களிடம் நபி ﷺ அவர்கள் கேட்டார்கள், "நீங்கள் நேற்று நோன்பு வைத்தீர்களா?" இல்லை என்று ஜுவைரியா رضي الله عنها கூறினார்கள். நாளை நோன்பு வைக்க நீங்கள் நாடியுள்ளீர்களா? என்று நபி ﷺ அவர்கள் கேட்டார்கள். இல்லை என்று ஜுவைரியா رضي الله عنها கூறினார்கள். அதற்கு நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: அப்படியென்றால் நீங்கள் நோன்பை விட்டுவிடுங்கள்! (அவ்வாறே, ஜுவைரியா رضي الله عنها நோன்பை முறித்து விட்டார்கள்.)[70]

**4). யவ்முஷ் ஷக் - சந்தேகமான நாளில் நோன்பு வைப்பது வெறுக்கப்பட்டதாகும்.**

அதாவது ஷஃபான் மாதத்தின் பிறை இருபத்தி ஒன்பது முடிந்தவுடன் அன்று மாலை பிறையை பார்க்க முடியாத அளவிற்கு வானம் தெளிவாக இல்லையென்றால் அதை அடுத்துள்ள நாளில் நோன்பு வைப்பது ஹராம் - தடுக்கப்பட்டதாகும். வானம் தெளிவாக இருந்து, பிறை தெரியவில்லை என்றால் அதை சந்தேக நாள் என்று கூறமுடியாது.

مَنْ صَامَ الْيَوْمَ الَّذِي يَشُكُّ فِيهِ النَّاسُ فَقَدْ عَصَى أَبَا الْقَاسِمِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ

அம்மார் இப்னு யாசிர் رضي الله عنه கூறுகின்றார்கள்: யார் மக்கள் சந்தேகிக்கின்ற

70. நூல்: புகாரி, எண்: 1850

“யவ்முஷ் ஷக்” - நாளில் நோன்பு வைப்பாரோ அவர் அபுல் காசிம் அவர்களுக்கு மாறு செய்துவிட்டார்.[71]

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ لَا يَتَقَدَّمَنَّ أَحَدُكُمْ رَمَضَانَ بِصَوْمِ يَوْمٍ أَوْ يَوْمَيْنِ إِلَّا أَنْ يَكُونَ رَجُلٌ كَانَ يَصُومُ صَوْمَهُ فَلْيَصُمْ ذٰلِكَ الْيَوْمَ رواه البخاري برقم ١٧٨١**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவரும் ரமழான் மாதத்தை, அதற்கு முன்னதாக ஒரு நாள் அல்லது இரண்டு நாள்கள் நோன்பு வைத்து முந்திவிட வேண்டாம். ஆனால், யார் ஒருவர் தான் வழமையாக வைக்கின்ற (நஃபிலான நோன்புடைய திங்கள், வியாழன் போன்ற) நாளாக அது இருந்தால் மட்டும் அந்த நாளில் அவர் நோன்பு வைக்கவும்.[72]

**கருத்து:** ரமழான் உடைய பிறை பார்க்கப்பட்டு விட்டது என்று உறுதியாக தெரியாமல், பேணுதல் என்று எண்ணி ஷஃபானின் இறுதி நாளில் நோன்பு வைப்பதை நபி ﷺ அவர்கள் தடுத்தார்கள். பிறையைப் பார்த்தால் மட்டுமே ரமழான் உடைய நோன்பை வைக்க வேண்டும். ஆகவே, தேவை இல்லாத எவ்வித சிரமத்தையும் நாம் எடுக்கக் கூடாது.

ஒருவர் எப்போதும் திங்கள் அல்லது வியாழன் அன்று நோன்பு வைக்கின்ற வழக்கம் உள்ளவராக இருக்கின்றார். எதிர்பாராத விதமாக ஷஃபான் உடைய இறுதி நாள் திங்கள் அல்லது வியாழனாக அமைந்து விட்டால் இவர் அந்த நாளில் தனது வழமையான நஃபில் நோன்பை வைப்பது குற்றமில்லை. ஏனெனில், இவர் ரமழானை வரவேற்க வேண்டும் என்ற எண்ணத்தில் நோன்பு வைக்கவில்லை. மாறாக, தனது வழமையான நஃபில் நோன்பைத்தான் இவர் வைக்கின்றார்.

மேலும், ஷஃபானுடைய இறுதி நாளில் தன் மீது கடமையாக உள்ள கழா நோன்புகள், அல்லது நேர்ச்சை நோன்புகளை வைப்பதும் குற்றமில்லை.

71. அறிவிப்பாளர்: ஸிலா இப்னு ஸுஃபர் ﵁, நூல்: திர்மிதி, எண்: 622
72. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: புகாரி, எண்: 1781

**5). இரண்டு ஈத் - பெருநாள்களில் நோன்பு வைப்பது ஹராம் - தடுக்கப்பட்டதாகும்.**

**عَنْ أَبِي سَعِيدٍ ﷺ قَالَ نَهَى النَّبِيُّ ﷺ عَنْ صَوْمِ يَوْمِ الْفِطْرِ وَالنَّحْرِ رواه البخاري برقم ١٨٥٥**

நோன்பு பெருநாள் அன்றும் ஹஜ் பெருநாள் அன்றும் நோன்பு வைப்பதை நபி ﷺ அவர்கள் தடுத்தார்கள்.[73]

**عَنْ أَبِي عُبَيْدٍ مَوْلَى ابْنِ أَزْهَرَ ﷺ قَالَ شَهِدْتُ الْعِيدَ مَعَ عُمَرَ بْنِ الْخَطَّابِ ﷺ فَقَالَ هَذَانِ يَوْمَانِ نَهَى رَسُولُ اللهِ ﷺ عَنْ صِيَامِهِمَا يَوْمُ فِطْرِكُمْ مِنْ صِيَامِكُمْ وَالْيَوْمُ الْآخَرُ تَأْكُلُونَ فِيهِ مِنْ نُسُكِكُمْ رواه البخاري برقم ١٨٥٤**

அபூ உபைத் ﷺ கூறுகிறார்: நான் உமர் இப்னுல் கத்தாப் ﷺ அவர்களுடன் பெருநாள் தொழுகையில் கலந்துகொண்டேன். அப்போது அவர்கள் கூறினார்கள், இவை இரண்டு நாள்களாகும். அந்த இரண்டு நாள்களிலும் நோன்பு வைப்பதை ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தடுத்தார்கள். ஒன்று நீங்கள் நோன்பு நோற்று நோன்பை முடிக்கின்ற நாள். மற்றொரு நாள் உங்கள் குர்பானி பிராணியிலிருந்து நீங்கள் சாப்பிடுகின்ற நாள்.[74]

**6). "அய்யாமுத் தஷ்ரீக்" என்று கூறப்படுகின்ற மூன்று நாள்கள் அதாவது துல்ஹஜ் பிறை பதினொன்று, பன்னிரண்டு, பதிமூன்று ஆகிய தினங்களில் நோன்பு வைப்பது வெறுக்கப்பட்டதாகும்.**

**عَنْ نُبَيْشَةَ ﷺ الْهُذَلِيِّ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ أَيَّامُ التَّشْرِيقِ أَيَّامُ أَكْلٍ وَشُرْبٍ رواه مسلم برقم ١٩٢٦**

73. அறிவிப்பாளர்: அபூ ஸஈது ﷺ, நூல்: புகாரி, எண்: 1855

74. நூல்: புகாரி, எண்: 1854

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: அய்யாமுத் தஷ்ரீக் உண்பதற்கும் பருகுவதற்கும் உள்ள தினங்களாகும்.[75]

**عَنْ عُقْبَةَ بْنِ عَامِرٍ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ يَوْمُ عَرَفَةَ وَيَوْمُ النَّحْرِ وَأَيَّامُ التَّشْرِيقِ عِيدُنَا أَهْلَ الْإِسْلَامِ وَهِيَ أَيَّامُ أَكْلٍ وَشُرْبٍ رواه الترمذي برقم ٧٠٤**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: அரஃபா நாள், ஹஜ் பெருநாள், அய்யாமுத் தஷ்ரீக் ஆகிய தினங்கள் முஸ்லிம்களாகிய நமது பெருநாள்களாகும். இவை உண்பதற்கும் பருகுவதற்கும் உள்ள நாள்களாகும்.[76]

ஹஜ் தமத்துஃ அல்லது ஹஜ் கிரான் செய்பவர்கள் கண்டிப்பாக குர்பானி கொடுக்க வேண்டும். ஹஜ் கிரான் அல்லது ஹஜ் தமத்துஃ செய்பவர்களிடம் குர்பானி பிராணியை விலை கொடுத்து வாங்குவதற்கு செல்வம் இல்லை என்றால் அவர் பத்து நோன்புகள் வைக்க வேண்டும். அந்த பத்து நோன்புகளில் மூன்று நோன்புகள் மட்டும் ஹஜ்ஜில் இருக்கும்போது வைக்க வேண்டும். மற்ற ஏழு நோன்புகள் ஊருக்கு திரும்பியவுடன் வைத்துக்கொள்ளலாம். ஹஜ்ஜில் வைக்க வேண்டிய மூன்று நோன்புகளை அய்யாமுத் தஷ்ரீக் தினங்களில் நோன்பு வைத்து முடித்துவிடலாம். இந்த அனுமதி இவர்களுக்கு மட்டும் விசேஷமாக வழங்கப்பட்டதாகும்.

**عَنْ عَائِشَةَ وابْنِ عُمَرَ رَضِيَ اللهُ عَنْهُمْ قَالَا لَمْ يُرَخَّصْ فِي أَيَّامِ التَّشْرِيقِ أَنْ يُصَمْنَ إِلَّا لِمَنْ لَمْ يَجِدْ الْهَدْيَ رواه البخاري برقم ١٨٥٩**

75. அறிவிப்பாளர்: நுபைஷா அல்ஹுதலி ﷺ, நூல்; முஸ்லிம், எண்: 1926
76. அறிவிப்பாளர்: உக்பா இப்னு ஆமிர் ﷺ, நூல்: திர்மிதி, எண்: 704

ஆயிஷா ﵂ மற்றும் இப்னு உமர் ﵄ ஆகிய இருவரும் கூறுகிறார்கள்: அய்யாமுத் தஷ்ரீக் தினங்களில் நோன்பு வைக்க ஹஜ் உடைய குர்பானி கொடுக்க முடியாதவர்களைத் தவிர மற்றவர்கள் யாருக்கும் அனுமதி வழங்கப்படவில்லை.[77]

------------------------



77. நூல்: புகாரி, எண்: 1859

ஐந்தாவது பாடம்

## اعتكاف

## இஃதிகாஃப் - மஸ்ஜிதில் தங்குவது

இந்த பாடத்தில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன.

**முதல் சட்டவிளக்கம்**

## இஃதிகாஃப் என்றால் என்ன? அதன் சட்டம் என்ன?

ஒன்றோடு சேர்ந்து இருப்பது, அதில் தன்னை நிலைத்திருக்கச் செய்வது மொழி அடிப்படையில் இஃதிகாஃப் ஆகும்.

மார்க்கத்தில் இஃதிகாஃப் என்றால் அல்லாஹ்வை வணங்குவதற்காக ஒரு முஸ்லிம் மஸ்ஜிதில் தங்குவதாகும்.

இஃத்திகாஃப் உடைய சட்டம் என்னவென்றால் இது ஒரு சுன்னா ஆகும். அல்குர்ஆன் ஆர்வமூட்டிய, இன்னும் நபி ﷺ அவர்கள் விரும்பிய ஓர் அமலாகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

أَنْ طَهِّرَا بَيْتِيَ لِلطَّائِفِينَ وَالْعَاكِفِينَ وَالرُّكَّعِ السُّجُودِ

நீங்கள் இருவரும் என் இல்லத்தை தவாஃப் செய்பவர்களுக்காகவும் அங்கு தங்கி வணக்க வழிபாடு செய்கின்றவர்களுக்காகவும் குனிந்து சிரம் பணிந்து தொழுபவர்களுக்காகவும் (எனது இல்லத்தை) பரிசுத்தமாக வைத்திருங்கள்! (அல்குர்ஆன் 2:125)

'இந்த இஃதிகாஃப்' என்ற இபாதத்தை முந்திய சமுதாய மக்களும் செய்து வந்தார்கள் என்பதை இந்த வசனத்தில் இருந்து புரிய முடிகிறது.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَلَا تُبَاشِرُوهُنَّ وَأَنْتُمْ عَاكِفُونَ فِي الْمَسَاجِدِ

நீங்கள் மஸ்ஜிதில் இஃதிகாஃப் இருக்கும்போது உங்கள் மனைவிகளிடம் உறவு கொள்ளாதீர்கள்! (அல்குர்ஆன் 2:187)

عَنْ عَائِشَةَ ﵂ زَوْجِ النَّبِيِّ ﷺ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يَعْتَكِفُ الْعَشْرَ الْأَوَاخِرَ مِنْ رَمَضَانَ حَتَّى تَوَفَّاهُ اللهُ ثُمَّ اعْتَكَفَ أَزْوَاجُهُ مِنْ بَعْدِهِ رواه البخاري برقم ١٨٨٦

நபி ﷺ அவர்களின் மனைவி ஆயிஷா ﵂ அவர்கள் கூறுகின்றார்கள்: நபி ﷺ அவர்கள் ரமழான் மாதத்தில் இறுதி பத்து நாட்களில் இஃதிகாஃப் இருப்பார்கள். அல்லாஹ் அவர்களை உயிர்கைப்பற்றுகின்ற வரை இதை அவர்கள் விடவில்லை. பிறகு, நபி ﷺ அவர்களின் மரணத்திற்கு பின்னர் அவர்களின் மனைவிமார்கள் இஃதிகாஃப் இருந்தார்கள்.[78]

நேர்ச்சையின் அடிப்படையில் தன் மீது கடமையாக்கிக் கொண்டாலே தவிர மற்ற நேரங்களில் பொதுவாக இஃதிகாஃப் என்ற வணக்கம் சுன்னாவாகும். இது மார்க்கம் அனுமதித்த ஒரு வணக்கமாகும். இதற்கு குர்ஆன், சுன்னா மற்றும் இஜ்மாவிலிருந்து ஆதாரங்கள் உள்ளன.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## இஃதிகாஃப் உடைய நிபந்தனைகள்

இந்த இஃதிகாஃப் அங்கீகரிக்கப்பட்ட வணக்கமாக ஆக வேண்டுமென்றால் அதற்கு சில நிபந்தனைகள் உள்ளன. அந்த நிபந்தனைகள் பூர்த்தி செய்யப்பட்டால்தான் இஃதிகாஃப் ஏற்றுக் கொள்ளப்படும்.

அந்த நிபந்தனைகள் பின்வருமாறு

78. நூல்: புகாரி, எண்: 1886

**1). இஃதிகாஃப் இருப்பவர் முஸ்லிமாக, புத்தி சுவாதீனமானவராக, பிரித்தறிகின்ற பக்குவமுள்ளவராக இருக்க வேண்டும்.**

ஆகவே, காஃபிர் - நிராகரிப்பாளர், மஜ்னூன் - பைத்தியக்காரர், பிரித்தறிகின்ற பக்குவமற்ற சிறுவர் இஃதிகாஃப் இருப்பது சரியாகாது.

இஃதிகாஃப் இருப்பதற்கு பருவ வயதை அடைந்திருக்க வேண்டும் என்பது நிபந்தனை அல்ல. அவ்வாறே, ஆணாக இருக்க வேண்டும் என்பது இதற்கு நிபந்தனை அல்ல.

ஆகவே, பெண்களும் இஃதிகாஃப் இருப்பது கூடும். பருவத்தை எட்டிராத ஆனால் பிரித்தறிகின்ற பக்குவமுள்ள சிறுவர் இஃதிகாஃப் இருப்பது கூடும்.

**2). நிய்யத் - அல்லாஹ்விற்காக இஃதிகாஃப் இருக்கின்றேன்,** (அல்லது, இஃதிகாஃப் இருந்து அல்லாஹ்வை வணங்குகின்றேன்) **என்று மனதில் உறுதியான எண்ணம் இருக்க வேண்டும்.**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

**عَنْ عُمَرَ بْنَ الْخَطَّابِ رضي الله عنه عَلَى الْمِنْبَرِ قَالَ سَمِعْتُ رَسُولَ اللهِ ﷺ يَقُولُ إِنَّمَا الْأَعْمَالُ بِالنِّيَّاتِ وَإِنَّمَا لِكُلِّ امْرِئٍ مَا نَوَى رواه البخاري برقم ١**

அமல்கள் - செயல்கள் எல்லாம் எண்ணங்களைக் கொண்டுதான் (முடிவு செய்யப்படுகின்றன). ஒவ்வொருவருக்கு அவர் எதை எண்ணினாரோ அதுதான் கிடைக்கும்.[79]

**3). மஸ்ஜிதில்தான் இஃதிகாஃப் இருக்க வேண்டும்.**

நபி ﷺ அவர்கள் மஸ்ஜிதில்தான் இஃதிகாஃப் இருந்திருக்கின்றார்கள். மஸ்ஜிது அல்லாத இடத்தில் நபி ﷺ அவர்கள் இஃதிகாஃப் இருந்ததில்லை.

அல்லாஹ் கூறுகின்றான்:

79. அறிவிப்பாளர்: உமர் இப்னுல் கத்தாப் رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 1

وَلَا تُبَاشِرُوهُنَّ وَأَنْتُمْ عَاكِفُونَ فِي الْمَسَاجِدِ

நீங்கள் மஸ்ஜிதில் இஃதிகாஃப் இருக்கும்போது உங்கள் மனைவிகளிடம் உறவு கொள்ளாதீர்கள்! (அல்குர்ஆன் 2:187)

**4). ஆண்கள் இஃதிகாஃப் இருப்பதற்கு அந்த மஸ்ஜிது ஐந்து நேரத் தொழுகைகள் நடைபெறுவதாக இருக்கவேண்டும்.**

அப்படி இல்லையென்றால் ஒவ்வொரு தொழுகைக்காகவும் அவர் வெளியில் செல்ல வேண்டியது வரும். இது இஃதிகாஃப் உடைய நோக்கத்திற்கு முரணாக அமைந்துவிடும். ஜமாஅத்துக்கு செல்லாமல் அந்த மஸ்ஜிதிலேயே இருந்துவிட்டால் ஜமாஅத்தை விட்ட குற்றம் ஏற்படும்.

ஏனெனில், ஆண்களுக்கு ஜமாஅத் கட்டாயமாகும். பெண்களுக்கு இந்த நிபந்தனை இல்லை. காரணம் அவர்களுக்கு ஜமாஅத் தொழுகை கட்டாயமில்லை. ஆகவே, பெண்கள் தங்குவதில் எவ்வித பிரச்சனையும் ஆபத்தும் இல்லை என்றால் அவர்கள் எந்த மஸ்ஜிதில் வேண்டுமானாலும் இஃதிகாஃப் இருக்கலாம். அதில் ஐந்து நேர ஜமாஅத் தொழுகை நடந்தாலும் சரி. நடக்கவில்லை என்றாலும் சரி.

ஆண்கள் இஃதிகாஃப் இருக்கின்ற மஸ்ஜிதில் ஜுமுஆ தொழுகை நடக்க வேண்டும் என்ற நிபந்தனை இல்லை. ஆனால், ஜுமுஆ தொழுகை நடைபெறுகின்ற மஸ்ஜிதில் இஃத்திகாஃப் இருப்பது மிக நல்லதாகும்.

**5). பெருந்தொடக்கிலிருந்து நீங்கி சுத்தமாக இருக்க வேண்டும்.**

ஆகவே, குளிப்பு கடமையான ஜனாபத் உடையவர், ஹைழ் உள்ள பெண், நிஃபாஸ் உள்ள பெண் இஃதிகாஃப் இருப்பது சரியாகாது. காரணம் இவர்கள் மஸ்ஜிதில் தங்குவது கூடாது.[80]

80. இஃதிகாஃப் இருப்பவருக்கு ஸ்கலிதம் ஏற்பட்டுவிட்டால் அவர் உடனடியாக குளித்து சுத்தமாகிவிட வேண்டும். ஹைழ் மற்றும் நிஃபாஸ் உள்ள பெண்கள் இஃதிகாஃப் இருப்பது கூடாது என்று தடுக்கின்ற நபிமொழிகள் ஏதும் இல்லை. ஆகவே, அவர்கள் இஃதிகாஃப் இருப்பது குற்றமில்லை. அல்லாஹ் மிக அறிந்தவன்.

இஃதிகாஃப் இருப்பதற்கு நோன்பு நிபந்தனை இல்லை. அதாவது நோன்புடன்தான் இஃதிகாஃப் இருக்கவேண்டும் என்பது அவசியமில்லை.

عَنْ عَبْدِ اللهِ بْنِ عُمَرَ عَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ ﵄ أَنَّهُ قَالَ يَا رَسُولَ اللهِ إِنِّي نَذَرْتُ فِي الْجَاهِلِيَّةِ أَنْ أَعْتَكِفَ لَيْلَةً فِي الْمَسْجِدِ الْحَرَامِ فَقَالَ لَهُ النَّبِيُّ ﷺ أَوْفِ نَذْرَكَ فَاعْتَكَفَ لَيْلَةً رواه البخاري برقم ١٩٠١

அப்துல்லாஹ் இப்னு உமர் ﵁ தனது தந்தை உமர் இப்னுல் கத்தாப் ﵁ வாயிலாக அறிவிக்கின்றார்கள். அல்லாஹ்வின் தூதரே அறியாமைக் காலத்தில், ‘அல் மஸ்ஜிதுல் ஹராம்’ல் ஓர் இரவு இஃதிகாஃப் தங்க வேண்டும் என்று நான் நேர்ச்சை செய்திருந்தேன் என்று உமர் ﵁ அவர்கள் கூறினார்கள். அதற்கு நபி ﷺ அவர்கள் உமர் ﵁ அவர்களுக்கு, உமது நேர்ச்சையை நீர் நிறைவேற்றுவீராக! என்று கூறினார்கள். அவ்வாறே, உமர் ﵁ அவர்கள் ஓர் இரவு இஃதிகாஃப் இருந்தார்கள்.[81]

**கருத்து:** இஃதிகாஃப் இருப்பதற்கு நோன்பு வைத்திருக்க வேண்டும் என்பது நிபந்தனையாக இருந்திருந்தால் அவர்கள் இரவில் இஃதிகாஃப் இருப்பதும் சரியாகாது. நபி ﷺ அவர்களும் அதற்கு அனுமதி கொடுத்திருக்க மாட்டார்கள். இஃதிகாஃப் ஒரு தனி வணக்கமாகும். நோன்பு ஒரு தனி வணக்கமாகும். ஆகவே, ஒன்றை செய்வதற்கு மற்றொன்று இருக்க வேண்டும் என்பது அவசியமில்லை.

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## இஃதிகாஃப் உடைய கால அளவு, முஸ்தஹப் மற்றும் அனுமதிக்கப்பட்ட காரியங்கள்

இஃதிகாஃப் உடைய கால அளவு, அதில் பேணவேண்டிய முஸ்தஹப் -விரும்பத்தக்க காரியங்கள், இன்னும் இஃதிகாஃபில் அனுமதிக்கப்பட்ட காரியங்கள்.

81. நூல்: புகாரி, எண்: 1901

**1). இஃதிகாஃப் உடைய காலம் மற்றும் அதன் நேரம்.**

ஒரு குறிப்பிட்ட காலம் மஸ்ஜிதில் தங்குவது இஃதிகாஃப் உடைய ருக்ன் ஆகும். மஸ்ஜிதில் தங்கவில்லை என்றால் அது இஃதிகாஃபாக ஆகாது. இஃதிகாஃப் உடைய குறைந்தபட்ச கால அளவில் அறிஞர்களுக்கு மத்தியில் பல கருத்துகள் உள்ளன. அவற்றில் இன் ஷா அல்லாஹ் மிக சரியான கருத்து இஃதிகாஃபிற்கு நிர்ணயிக்கப்பட்ட ஒரு கால அளவு இல்லை என்பதுதான். ஆகவே, ஒரு சிறிய கால அளவு கூட இஃதிகாஃப் இருக்கலாம். ஓர் இரவு அல்லது ஒரு பகல் முழுமையாக இஃதிகாஃப் இருப்பது சிறப்பு என்று கூறலாம். ஏனெனில், நபி ﷺ அவர்களோ அல்லது நபித்தோழர்களோ இதை விட குறைவான கால அளவு இஃதிகாஃப் இருந்ததாக நமக்கு அறிவிப்புகள் ஏதும் வரவில்லை.

இஃதிகாஃப் உடைய நேரங்களில் மிக சிறப்பானது ரமழான் உடைய இறுதி பத்து நாள்களாகும்.

**عَنْ عَائِشَةَ زَوْجِ النَّبِيِّ رضي الله عنها أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يَعْتَكِفُ الْعَشْرَ الْأَوَاخِرَ مِنْ رَمَضَانَ حَتَّى تَوَفَّاهُ اللَّهُ ثُمَّ اعْتَكَفَ أَزْوَاجُهُ مِنْ بَعْدِهِ رواه البخاري برقم ١٨٨٦**

நபி ﷺ அவர்களின் மனைவி ஆயிஷா رضي الله عنها அவர்கள் கூறுகின்றார்கள்: நபி ﷺ அவர்கள் ரமழான் மாதத்தில் இறுதி பத்து நாள்களில் இஃதிகாஃப் இருப்பார்கள். அல்லாஹ் அவர்களை உயிர் கைப்பற்றுகின்ற வரை இதை அவர்கள் விடவில்லை. பிறகு, நபி ﷺ அவர்களின் மரணத்திற்கு பின்னர் அவர்களின் மனைவிமார்கள் இஃதிகாஃப் இருந்தார்கள்.[82]

ஒருவர் இது அல்லாத வேறு நேரத்தில் இஃதிகாஃப் இருந்தால் அது ஆகுமானதுதான். ஆனால், சிறப்பானது அல்ல.

யார் ரமழானுடைய இறுதி பத்தில் இஃதிகாஃப் இருக்க வேண்டும் என்று

82. நூல்: புகாரி, எண்: 1886

நாடுகின்றாரோ அவர் பிறை இருபத்தி ஒன்று உடைய காலையில் மஸ்ஜிதிற்குள் சென்று விட வேண்டும். பிறகு தனது இஃதிகாஃபை ஆரம்பிக்க வேண்டும். ரமழானுடைய இறுதி நாளின் சூரியன் மறைந்தவுடன் அவருடைய இஃதிகாஃப் முடிந்துவிடும்.

## 2). இஃதிகாஃபில் பேணவேண்டிய முஸ்தஹப் - விரும்பத்தக்க காரியங்கள்

இஃதிகாஃப் என்பது அடியான் தனது ரப்புடன் - இரட்சகனுடன் தனித்து விடுவதற்காக உள்ள ஒரு வணக்கமாகும். இந்த வணக்கத்தில் அடியான் அனைத்து விதமான உலக தொடர்புகளையும் துண்டித்துவிட்டு அல்லாஹ்வை வணங்குவதற்காக தன்னை ஒதுக்கிக் கொள்வது விரும்பத்தக்கதாகும். ஆகவே, வணக்க வழிபாடுகளை அதிகம் செய்ய வேண்டும். தொழுகை, திக்ர், துஆ, குர்ஆன் ஓதுவது, தவ்பா இஸ்திக்ஃபார் - பாவமன்னிப்புத் தேடுவது, இன்னும் இவை போன்ற வணக்க வழிபாடுகளில் அதிகம் ஈடுபட வேண்டும்.

## 3). இஃதிகாஃப் இருப்பவருக்கு அனுமதிக்கப்பட்ட காரியங்கள்

அவசியமான தேவைகளுக்காக மஸ்ஜிதை விட்டு வெளியில் செல்வது கூடும். உதாரணமாக, உணவு, குடிநீர் போன்ற தேவைகளுக்காக அவற்றை கொண்டுவர யாரும் உதவவில்லை என்றால் வெளியில் செல்லலாம். அதுபோன்று மலம், ஜலம் கழிப்பது, உளூ செய்வது, கடமையான குளிப்பு போன்ற தேவைகளுக்காகவும் வெளியில் செல்லலாம்.

பயனுள்ள விஷயங்களை மக்களுடன் பேசுவதும் சுக நலன்களை விசாரிப்பதும் கூடும். அனாவசியமான, தேவையற்ற பேச்சுகளை தவிர்க்க வேண்டும். ஏனெனில், இது இஃதிகாஃப் உடைய நோக்கத்திற்கு முரணானதாகும். இ'ஃதிகாஃப் இருப்பவரை அவருடைய உறவினர்கள், குடும்பத்தார்கள் சந்திக்கலாம். தேவையான நேரம் அவர்களுடன் அவர் பேசலாம். அவர்களை வழியனுப்ப தான் இஃத்திகாஃப் இருக்கின்ற இடத்தை விட்டு வெளியில் வரலாம்.

**عَنْ صَفِيَّةَ بِنْتِ حُيَيٍّ رضي الله عنها قَالَتْ كَانَ رَسُولُ اللهِ ﷺ مُعْتَكِفًا فَأَتَيْتُهُ أَزُورُهُ لَيْلًا فَحَدَّثْتُهُ ثُمَّ قُمْتُ فَانْقَلَبْتُ فَقَامَ مَعِي لِيَقْلِبَنِي رواه البخاري برقم ٣٠٣٩**

ஸஃபிய்யா பின்த் ஹுயய் رضي الله عنها கூறுகிறார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் இஃதிகாஃப் இருந்தார்கள். நான் அவர்களை சந்திக்க இரவில் வந்தேன். அவர்களுடன் பேசினேன். பிறகு எழுந்து புறப்பட்டு சென்றேன். என்னை அனுப்பிவைக்க நபி ﷺ அவர்களும் எழுந்து வந்தார்கள்.[83]

இஃதிகாஃப் இருப்பவர் மஸ்ஜிதில் தூங்கலாம், உண்பது, உறங்குவது, குடிப்பது போன்ற தேவைகளை செய்துகொள்ளலாம். அதேநேரத்தில் மஸ்ஜிதின் சுத்தத்தையும் பராமரிப்பையும் கவனத்தில் வைக்க வேண்டும்.

**நான்காவது சட்டவிளக்கம்**

## இஃதிகாஃபை முறிக்கக்கூடிய காரியங்கள்

1). தேவை இன்றி, வேண்டுமென்றே மஸ்ஜிதை விட்டும் வெளியேறுவது இஃதிகாஃபை முறித்துவிடும். வெளியேறியது சிறிது நேரமாக இருந்தாலும் சரி.

**عن عَائِشَةَ زَوْجَ النَّبِيِّ رضي الله عنها قَالَتْ وَإِنْ كَانَ رَسُولُ اللهِ ﷺ لَيُدْخِلُ عَلَيَّ رَأْسَهُ وَهُوَ فِي الْمَسْجِدِ فَأُرَجِّلُهُ وَكَانَ لَا يَدْخُلُ الْبَيْتَ إِلَّا لِحَاجَةٍ إِذَا كَانَ مُعْتَكِفًا**

**رواه البخاري برقم ١٨٨٩**

நபி ﷺ அவர்களின் மனைவி ஆயிஷா رضي الله عنها கூறுகிறார்கள்: நபி ﷺ அவர்கள் மஸ்ஜிதில் இஃதிகாஃப் இருக்கும்போது தமது தலையை வீட்டுக்குள் நுழைப்பார்கள். நான் அவர்களுக்கு தலைவாரி விடுவேன். அவர்கள் இஃதிகாஃப் இருந்தால் தேவை இல்லாமல் வீட்டுக்குள் நுழைய மாட்டார்கள்.[84]

83. நூல்: புகாரி, எண்: 3039
84. நூல்: புகாரி, எண்: 1889

2). மனைவியுடன் உடலுறவு கொள்வது. இது எந்த நேரத்தில், எந்த இடத்தில் நிகழ்ந்தாலும் சரி இஃதிகாஃப் இருப்பவர் இந்த காரியத்தை செய்தால் அவருடைய இஃதிகாஃப் முறிந்துவிடும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَلَا تُبَاشِرُوهُنَّ وَأَنْتُمْ عَاكِفُونَ فِي الْمَسَاجِدِ

நீங்கள் மஸ்ஜிதில் இஃதிகாஃப் இருக்கும்போது உங்கள் மனைவிகளிடம் உறவு கொள்ளாதீர்கள்! (அல்குர்ஆன் 2:187)

இவ்வாறே, இச்சையை தூண்டுகின்ற வேறு செயல்களால் தனது விந்தை வெளியேற்றினாலும் இஃதிகாஃப் முறிந்துவிடும். அது தானாக செய்தாலும் சரி, அல்லது மனைவியுடன் செய்தாலும் சரி.

**3). புத்தி பேதலித்து விடுவதும் இஃதிகாஃபை முறித்துவிடும்.**

ஆகவே, ஒருவருக்கு பைத்தியம் பிடித்துவிட்டால் அல்லது மயக்கம் ஏற்பட்டுவிட்டால் இஃதிகாஃப் முறிந்துவிடும். காரணம் பைத்தியம் பிடித்தவர்களும் மயக்கமுற்றவர்களும் இபாதத் செய்வதற்குரிய தகுதி அற்றவர்கள் ஆவார்கள்.

**4). இஃதிகாஃப் இருக்கின்ற பெண்ணுக்கு ஹைழ் அல்லது நிஃபாஸ் ஏற்பட்டுவிட்டால் அவளுடைய இஃதிகாஃப் முறிந்துவிடும்.**

ஏனெனில், ஹைழ் வந்த பெண்ணும், நிஃபாஸ் வந்த பெண்ணும் மஸ்ஜிதில் தங்குவது கூடாது.[85]

**5). ردة ரித்தத் - மதம் மாறுவதும் இஃதிகாஃபை முறித்துவிடும்.**

ஏனெனில், மதம் மாறிவிடுவது இபாதத்திற்கு முரணான ஒன்றாகும்.

85. ஹைழ் அல்லது நிஃபாஸ் உடைய பெண்கள் மஸ்ஜிதிற்குள் செல்வது அல்லது அங்கு தங்குவது கூடாது என்று ஸஹீஹான நபிமொழிகள் வாயிலாக உறுதி செய்யப்பட வில்லை. பலவீனமான ஹதீஸ்களைக் கொண்டு ஒன்றைக் கூடாது என்று நாம் கூறமுடியாது. ஹைழ் உள்ள பெண்கள் மஸ்ஜிதிற்குள் செல்லக்கூடாது என்று வருகின்ற நபிமொழிகளும் பலவீனமானவையாகும் என்று ஹதீஸ் கலை அறிஞர்கள் கூறுகிறார்கள். அல்லாஹ் மிக அறிந்தவன்.

அல்லாஹ் கூறுகின்றான்:

لَئِنْ أَشْرَكْتَ لَيَحْبَطَنَّ عَمَلُكَ

(நபியே!) நீர் இணைவைத்தால் உமது அமல்கள் நிச்சயமாக அழிந்துவிடும். (அல்குர்ஆன் 39:65)

---------------------

அல்ஹம்து லில்லாஹ்!
நூல் நிறைவுற்றது.